# சிவானந்தரின்
## ரேடியோ உபன்யாசங்கள்



ஸ்ரீ சுவாமி சிவானந்தா



இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்க வெளியீடு

# சிவானந்தரின் ரேடியோ உபன்யாசங்கள்

அருளியது :

**ஸ்ரீ சுவாமி சிவானந்தா**

தமிழாக்கம் :

**திரு. L. ஜானகிராமன், M. A.**

***சிவானந்தா நூற்றாண்டு விழா வெளியீடு***




**தெய்வீக வாழ்க்கைச் சங்கம்**

சிவானந்தா ஆஸ்ரமம்

இராசிபுரம் : : சேலம் ஜில்லா

**விலை ]** **1985** **[ ரூ. 4—00**

# ஆசியுரை

நம் வாழ்க்கையில் ஒளியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் சத்குரு ஸ்ரீ சிவானந்தா அவர்களுக்கு வணக்கம்.

பல ஆண்டுகளாக எண்ணற்ற நூல்களை வெளியிட்டு குருமகராஜ் சுவாமி சிவானந்தா அவர்களின் புனிதமான ஞானயக்ஞப்பணியை இராசிபுரம் தெய்வீக வாழ்க்கைச் சங்கம் முறையாகவும், ஒழுங்காகவும், திட்டமிட்டும் நடத்தி வருகிறது. அதனால் தமிழ் நாட்டிலும் வெளிநாடுகளிலும் தமிழர்கள் வாழும் பகுதிகளில் இருக்கும் ஆயிரக்கணக்கான ஆன்மீக சாதகர்கள், அடியவர்களின் இல்லங்களில் சுவாமி சிவானந்தா அவர்களால் எழுதப்பட்ட வாழ்வில் மறுமலர்ச்சி உண்டாக்கும் நூல்களின் தமிழ் மொழிபெயர்ப்புக்கள் இன்று இருக்கின்றன.

இவ்வாண்டுக்கான ஞானயக்ஞத் தொடரில் 'சிவானந்தரின் ரேடியோ உபன்யாசங்கள்' என்ற நூலை திரு. L. ஜானகிராமன், M. A., அவர்கள் மிக அற்புதமாக தமிழில் மொழி பெயர்த்துள்ளார்கள்.

இந்நூலை மிகச் சிறந்த முறையில் சேலம் லிட்டரரி பிரஸ்ஸார் அச்சடித்துக் கொடுத்துள்ளனர்.

இப்பணிக்குத் தேவையான பொருளை வாரி வழங்கியவர்கள், இப்புனிதமான பணியைச் செய்த நல்ல ஆன்மாக்கள், இந்த ஆன்மீக போதனைகளைப் படிப்பவர்கள் ஆகிய அனைவருக்கும் எல்லாம் வல்ல இறைவன் தெய்வீக அருளைப் பொழிய வேண்டுமெனப் பிரார்த்தனை செய்கிறேன்.

Swami Chidananda

ॐ

# பொருளடக்கம்

# சிவானந்தரின் ரேடியோ உபன்யாசங்கள்

## புத்தகம் அச்சிட நன்கொடை அளித்த அன்பர்கள்

| நெ. | பெயரும் விலாசமும் | ரூபாய் |
|---|---|---|
| 1. | Sri Swami Vignanananda, Prana Yoga Ashram, California, U. S. A. ... | 1000 |
| 2. | திரு. G. கஜராஜன், Income Tax Officer, சேலம்-7. ... | 100 |
| 3. | திரு. P. கணபதி கவுண்டர், 'முன்சீப் தோட்டம்' அரியாகவுண்டம்பட்டி, சேலம் Dt. ... | 100 |
| 4. | திரு. C. L. பாலசுப்பரமணியம், C/o. Best & Crompton Engg. Ltd., கோவை-18. ... | 101 |
| 5. | திரு. S. K. அரியப்ப செட்டியார் & சன்ஸ், உரம் மொத்த வியாபாரம், இராசிபுரம். ... | 100 |
| 6. | திரு. S. V. இராமசாமிக் கவுண்டர், சின்னபள்ளிபாளையம், காட்டுபுத்தூர். ... | 100 |
| 7. | திரு. N. P. வாசன் G/53106 Pharmacist C/o. 99. ... | 108 |
| 8. | திரு. V. L. நாகராஜ், 'சிவானந்தா-சிதானந்தா' பெங்களூர்-38. ... | 100 |

9. திரு. M. பாலதண்டபாணி,
கர்நாடக மெட்டல் ஸ்டோர்ஸ்,
பெங்களூர்-53. ... 100

10. திரு. A. R. M. மாணிக்கவாசகம் செட்டியார்,
மெட்டல் வேர் எம்போரியம்,
பெங்களூர்-53. ... 101

11. திரு. சுபஸ்ரீ
ஸ்ரீ ராமநவமி உற்சவ கமிட்டித் தலைவர்,
பலராம் பிளாக்ஸ், செகந்திராபாத்-26. ... 100

12. திரு. G. வெங்கடேஷ் &
G. இராஜகோபால் & கோ.,
ஜவுளி வியாபாரம், செகந்திராபாத்-3. ... 100

13. திரு. P. வேலாயுதம், 'சரவணபவன்'
ஜவுளி வியாபாரம், இடப்பாடி-637 101. ... 100

14. வனவாசி திரு. S. மல்லிச் செட்டியார்,
குகை, சேலம்-6. ... 100

15. திரு. M. M. சுப்பரமண்யம்,
ஸ்ரீ நிலையம், தூத்துக்குடி-3. ... 101

16. திரு. T. R. இராமனுதன்,
'கற்பகம் கார்டன்ஸ்' சென்னை-20. ... 101

17. Dr. S. பாலகிருஷ்ணன், B. E., Phd.
இராமகிருஷ்ணு ரோடு, சேலம்-7. ... 100

18. திரு. P. மாணிக்கம், செயலாளர்,
சன்மார்க்க சங்கம், மேச்சேரி. சேலம் Dt. ... 100

19. Sri. K. Anantha Swami,
'Sivananda Krupa' Bangalore-3. ... 101

20. திரு. S. பரமேஸ்வரன்,
'State Bank Colony' சேலம்-3. ... 100

21. திரு. J. வெங்கட்ராமன், M. A., விசாரத்,
S/o S. ஜெயராம்ஜி, வெண்ணந்தூர். ... 100

22. Sri. R. Srikantan, I. R. S.,
Income Tax Officer, Salem-9. ... 110

23. திரு. P. R. பட்டுலிங்கம்,
'ஆனந்த பவன்' கோபி-638 452. ... 100

24. அமரர் நாராயணசுவாமி நினைவாக
டாக்டர் ஸரஸ்வதி இராமனுதன்,
பள்ளத்தூர். ... 100

25. திரு. K. R. இராதாகிருஷ்ணன்,
80, T. V. சாமி ரோடு, R. S. புரம்,
கோவை-2. ... 100

26. Sri. M. S. Rangarajan, I. R. S.
Asst. Commissioner of Income Tax,
Salem-9. ... 101

27. திரு. ஐ. ஆதித்தன், C. T. O.
விற்பனை வரி அலுவலர், மதுரை-2. ... 100

28. திரு. R. P. ஏகாம்பரம்,
'அன்னை ஆயில் ஸ்டோர்ஸ்'
கொமாரபாளையம். ... 100

29. திரு. V. R. சாமியப்பன், ஈரோடு-9. ... 100

30. திரு. M. C. முத்து, B. S. T. பஸ் சர்வீஸ்,
வேலூர். ... 100

31. திரு. S. K. இராமராஜன்,
'கம்பன் நிலயம்' தஞ்சை. ... 100

32. திரு. R. சுந்தரராஜன்,
Mg. Partner: "N. B. S." நாமக்கல். ... 100

33. பேராசிரியர் E. சுப்பரமணியம், M. A.
நிர்வாகி, ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயா,
ஆற்காடு-632 503 ... 75

34. திரு. V. இராமச்சந்திர ரெட்டியார்
சாத்தனூர் (B. O.) விழுப்புரம் RMS. — 80

35. திரு. C. சிவராமகிருஷ்ணன்
நெ. 2, நாகலிங்கம் பிள்ளை தெரு, மதுரை-1 ... 70

36. திரு. N. கோவிந்தராஜ்,
முருகதாஸ் டீ ஸ்டோர்ஸ்,
போடி நாயக்கனூர்-626 513 மதுரை Dt. — 70

37. திரு. K. N. பச்சையப்பன், B. Com.
காரியதரிசி, காந்தி கல்வி நிலையம்,
மேல் நிலைப்பள்ளி, கூகலூர்-638 183 — 70

38. Sri. R. S. ANANDAN
42/22, East Patel Nagar
New Delhi-110 008 — 70

39. திரு. C. R. ராஜகோபால்,
15-No. 2 பிள்ளையார் கோயில் தெரு,
குகை, சேலம்-6 — 70

40. Sri. SUNDARAM,
N. V. Hotel, Salem-6 ... 70

41. திரு. A. K. T. ரங்கராஜன்
16-No. 2, பிள்ளையார் கோவில் தெரு,
குகை, சேலம்-6 — 70

42. ஸ்ரீ சுவாமி கேசவானந்தா,
183, அம்பலவாணசுவாமி கோயில் தெரு,
குகை, சேலம்-6 ... 70

# சிவானந்தரின்
# ரேடியோ உபன்யாசங்கள்

## 1. உண்மையான ஆனந்தத்திற்கு வழி

*[1950 செப்டம்பர் மாதம் 18ல் பாட்னு வானொலி நிலையத்திலிருந்து ஒலிபரப்பப்பட்டது.]*

அமர ஆத்மனே! தனிப்பட்ட மகிழ்ச்சியுடன் நான் இன்று இங்கு உரையாற்றுகின்றேன். ஆம் தனிப்பட்ட மகிழ்ச்சி, ஏனென்றால் இங்கிருந்துதான் சில தினங்களுக்கு முன் இம்மாநிலம் முழுவதும் ஒளி வீசும் தெய்வீக ஜோதியை நிர்மாணிக்க வேண்டுமென்ற எழுச்சி பெற்ற அன்பான அழைப்பு எனக்கு வந்தது. இந்த பாட்னு நகரில் மாண்புமிகு ஸ்ரீ. M. S. ஆனே அவர்கள் முதற்கொண்டு ஊர் பெரியவர்கள் அனைவரும் பங்குகொண்ட தொடக்க விழா நிகழ்ச்சி கடந்த டிசம்பர் மாதம் நடந்ததே அன்று எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. மேலாம் வாழ்க்கைக்கும், உயர்ந்த குறிக்கோளுக்கும் நீங்கள் உண்மை ஏக்கம் கொண்டிருப்பது எவ்வளவு அதிர்ஷ்டகரமானது என்பதைச் சுட்டிக்காட்டத் தேவையில்லை. உண்மை, அன்பு, ஆனந்தம் இவற்றின் அடிப்படையில் அமைந்த தெய்வீக வாழ்க்கையை விழையும் உங்கள் அவாவினை நிறைவேற்ற உறுதுணை புரியும் புனித ஆன்மாக்கள் உங்கள் ஆட்சியாளர்களாக இருப்பதினால் நீங்கள் இருமடங்கு பாக்கியவான்கள். தூய வாழ்க்கை, உயர்ந்த குறிக்கோள்கள், தன்னலமற்ற சேவை, பரந்த அன்பு, ஆன்மீக ஒளி இவற்றின் உயர்ந்த

தத்துவங்களை பீஹார் மாநிலத்தின் மூலை முடுக்கெல்லாம் பரப்புவதற்கான மாநில மையக்கிளையை தலைமை நகரமான பாட்ளுவில் நிறுவுவதின் மூலம் இந்த மகத்தான பணியை அவர்கள் தொடங்கியுள்ளனர். இந்த மனித முயற்சிகளையெல்லாம் ஆண்டவன் உள்ளிருந்து இயக்குகிருன். பீஹார் மாநில ஆட்சியாளர்கள், மக்கள் இவர்களிடையே உள்ள உண்மையான வேட்கை, ஆர்வம், உற்சாகம் இவற்றில் போதிசத்துவரின் அவதாரத்திளுல் நிலை நிறுத்தப்பட்ட, மகத்தான பாரம்பரியம் இந்த நவீன யுகத்தில் மீண்டும் எழுச்சி பெறுவதின் முன்னேடி அறிகுறியை நான் காண்கிறேன். ஏனென்ருல், பீஹார் மண்ணில் உள்ள, அமைதியான புத்த கயா கிராமத்தில்தான், புனித போதி மரத்தடியில், இருள் சக்திகள் மனிதனின் அஞ்ஞானம் இவற்றிற்கும், ஒளிச்சக்திகள் மனிதனிடம் மறைந்திருக்கும் தெய்வீகத்தன்மை இவைகளுக்கும் இடையே நிகழ்ந்த தெய்வீக நாடகம், சாக்கிய முனி உருவகத்தில் நடைபெற்றது. அறிவொளியும், அமரத்துவமும், விழிப்பும், விடுதலையும், கௌதமர் புத்தர் நிலையை எய்தியதும், இந்த நாடகத்தின் விளைவுகள் என்பது நீங்கள் அறிந்ததே. ''வாய்மையே வெல்லும் பொய் ஒரு பொழுதும் வெல்லாது'' என்ற மாண்டூக்ய உபநிஷத்தின் கூற்றை இந்த நாடகம் பிரதிபலிக்கிறது. ஏனெனில் உண்மையே கடவுள். வாய்மையே பிரம்மம். இந்திரியங்களால் அறியப்படுபவன அத்தனையும், மனதால் சிந்திக்கப்படுபவன அத்தனையும் ஒட்டு மொத்தமாகச் சேர்த்து, இந்த உண்மையுடன் ஒப்பிட்டு நோக்கிளுல், முற்கூறிய அனைத்தும், அழியக் கூடிய அரை குறை உண்மைகள் என்பதும், அவற்றை நீங்கள் சார்ந்திருப்பீர்களென்ருல் அவை உங்களுக்கு மிகவும் துக்ககரமான ஏமாற்றத்தை அளிக்கும் என்பதும் தெளிவு. இந்த அரை குறை

உண்மைகளை திரும்பிக்கூட பார்க்காமல், உண்மையை அடையச் செய்த வீரதீர போராட்டத்தின் புல்லரிக்கும் உதாரணம்தான் அரசகுமாரன் சித்தார்த்தனின் வாழ்க்கை. போகத்தை தியாகம் வென்றதையும், புலன்களின் வஞ்சக ஈர்ப்புகளை எதிர்த்து விவேகமும் வைராக்கியமும் பெற்ற வெற்றியையும் சித்தார்த்தனின் வாழ்க்கை சித்தரிக்கிறது. உங்களுக்கு வாழ்க்கையில் நிலையான வெற்றி கிட்ட வேண்டுமானால் இந்தப்பாடத்தை நினைவில் கொள்ளுங்கள். தன்னுடைய புலன்களுக்கு அடிமையாகிறவன் அழிந்தொழிகிறான். எனவே சிற்றின்பங்களுக்கு இரையாகாதீர்கள். ''முடிவான நன்மைக்கு ஸ்ரேயஸைத் தேர்ந்தெடுங்கள்'' என்று கூறி, உபநிஷத்துக்கள் உங்களுக்கு உண்மையான வெற்றிக்கும், ஆனந்தத்திற்கும் வழி காட்டுகின்றன. பேரின்ப மார்க்கம், சிற்றின்ப மார்க்கம் என்ற இருவழிகளில் நீங்கள் எல்லோரும் பேரின்ப மார்க்கத்தில் செல்லுங்கள். தெய்வீக வாழ்க்கை நெறி இதை எப்படிச் செய்ய வேண்டும் என்று கற்பிக்கிறது. சேவை, தன்னலமற்ற சேவை, அன்பு, தாய் தந்தையரிடம் மரியாதை, பெரியவர்கள், சமுதாயம், தேசம், பொதுவாக அனைத்து மனித குலம் இவற்றின் மேல் பக்தி, வழிபாடு, தியானம், ஞானம் இவற்றின் மூலம் இதைச் செய்யலாம். நல்லொழுக்கத்தைப் பெற அயராது முயலுங்கள். ஏனெனில் எல்லா நற்பேறுகளையும் அடைய நன்னடத்தையே அடிப்படை. உங்கள் இந்திரியங்களை முழுமையாகக் கட்டுப்படுத்துங்கள். ''தூய வாழ்வு உயர்ந்த எண்ணங்கள்'' என்ற குறிக்கோளைக்கொள்ளுங்கள். உண்மை, அன்பு தூய்மை இவற்றின் உருவமாக விளங்குங்கள். தன்னலமற்ற தியாகத்தைத் தழுவுங்கள். ''சேவையே பூஜை'' என்பதை அறிந்துகொள்ளுங்கள். கீழ்த்தரமான இயல்புகளின் உந்துதல்களை உதறித்தள்ளுங்கள்.

ஆரம்பத்தில் இது கடினமாக இருக்கலாம். ஆனால் முடிவில் உங்களுடைய முயற்சிகள் வெற்றிமாலை சூடும். முதலில் மகிழ்ச்சியற்றதாயும் துன்பமய மாகவும் இருப்பவை பிறகு நிலையான நன்மை பயப்பனவாக அமையும். கீழ்த்தரமான இயல்பு களை, போராட்டத்தின் மூலம் மட்டுமே வெற்றி கொள்ள முடியும். இது சிரமமான போராட்டமே. எனினும், உறுதி, இப்போராட்டத்தை சுலபமாக்கி, உங்களுக்கு வெற்றியைத் தருகிறது. புத்தபிரான் போன்ற பெரியோரின் வாழ்க்கையில் இந்த உறுதி தெளிவாகத் தெரிகிறது. ஆத்மார்த்தமான சாதனையினால் தன்னை அறிந்துகொண்டவன், ஞானம், ஒளி, ஆனந்தம் இவற்றை உலகிற்கு வாரி வழங்கும் மையமாகிறான். ஒளிபெற்ற அவன் அனைவருக்கும் ஒளி அளிப்பவனாகிறான். தானும் விடுதலை அடைந்து மற்றவர்களையும் விடுவிக்கிறான். அவன் பரந்த உலக உணர்வு மயமாக இருப்பதினால் அவனால் பிரச்சனைகளை வெற்றிகரமாக தீர்க்க முடிகிறது. அனைத்து ஆன்மாவாகவே அவன் ஆகி விடுவதால், எது மிக நல்லதோ அதைச் செய்ய முடிகிறது. அவன் செய்வனவெல்லாம் சட்டங் களாகின்றன. அவன் செயல்கள் அனைத்தும் அறச் செயல்களுக்கு உதாரணமாக அமைகின்றன. அவன் புவனம் அனைத்திற்கும் சொந்தமான உலக ரக்ஷகன் ஆகிறான். உள்ளுரையும் பரிபூர்ண தெய்வத் தன்மையை அறிவது ஒருவனுக்கு முழுமையையும் மோக்ஷத்தையும் அளிப்பதோடு மட்டுமல்லாமல், துன்பத்தில் உழலும் மக்களுக்கு உதவிக்கரம் அளிக்கக்கூடிய ஒரே சாத்தியக்கூறாகவும் அமைகிறது. இந்த மேன்மைத்திறமே ஞானத்தையும் சக்தி யையும் அருள்கிறது. நீங்கள் சுதந்திரம் பெற்றா லன்றி உங்களால் மற்றவர்களை விடுவிக்க முடியாது. எனவே சம்சார பந்தம், அஞ்ஞானம், ஆசைத் தளைகளிலிருந்து உங்களை விடுவித்துக் கொள்ளுங்கள்.

ஜீவாத்மா மறு பிறவி எடுக்கக் காரணமாக அமைவது ஆசையே. சுயநலமறுத்தல், சரணாகதி, தன்னடக்கம் ஆன்மஞானம் இவை மூலம் பிறப்பு இறப்பு என்ற தொடரை வெட்டி எறியுங்கள்.

பீஹாரே ! எழுமின் !

புகழ்பெற்ற நளந்தா பல்கலைக்கழகம் கொடிகட்டிப் பரந்த நாடு பீஹார். பீஹார் மக்கள் தெய்வீக வாழ்க்கை நெறியைக் கடைப்பிடிப்பார்களானால் நளந்தாவின் புகழ் போல மேலும் நூறு மடங்கு புகழ் அவர்களுக்குக் கிட்டும் என்பதில் ஐயமில்லை. தீமையை எதிர்த்து போராட்டம், சகிப்புத்தன்மை, சாதனை இவைகள் யாண்டும் பீஹார் மக்களின் இயல்பாக இருந்திருக்கின்றன. இயற்கையின் கடுமையான சோதனைகளுக்கு பீஹார் மக்கள் உள்ளாகியிருக்கின்றனர். அந்த சவாலை, நீங்கள் தீரமாக எதிர்த்து, பொறுமையுடன் சகித்துக் கொண்டு, வீரமாக வெற்றி கொண்டு சமாளித்திருக்கிறீர்கள். இவைகளே, வாழ்க்கைப் போராட்டத்திலும், சாதனை மார்க்கத்திலும், வெற்றி நடை போடுபவர்கள் ஒவ்வொருவருக்கும் உள்ள உண்மையான தகுதிகள். நீங்கள் உயர்ந்த நிலையான மதிப்புக்களிடம் உங்கள் நோக்கத்தை நிலை நிறுத்தி, நிலையற்ற உலக வாழ்க்கையில் உள்ள கஷ்டங்களை எதிர்கொள்வதில், உங்கள் அடிப்படை நம்பிக்கையையும், உள்வலிவையும், பலத்தையும் காட்டுகிறீர்கள். அதுவே உங்கள் குறிக்கோளாக அமைய வேண்டும். சாதாரண புலன் இன்பமாகிய நிழல்களை வெறுத்து ஒதுக்குங்கள். உண்மையை அறிய நீங்கள் செய்யும் முயற்சி வீரமுடையதாக இருக்கட்டும். முழுமையைப் பெற ஒரு மகிழ்ச்சிகரமான போராட்டமாக உங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொள்ளுங்கள். இந்த ஆன்மீக பூமியின் பண்பாட்டின் ஜோதியை கொண்டு செல்பவர்களாயிருங்கள். வேதம் கூறும்

ஒருமைப்பாடு, சகோதரத்துவம் இவற்றை உங்கள் சிந்தனை, வாக்கு, செயல், இவற்றில் பிரதிபலிக்கட்டும். உலகம் தழுவிய அன்பு பாவத்தை பிரதிபலியுங்கள். உள்முக தியானத்தின் சாந்தியையும், சக்தியையும் பிரதிபலியுங்கள். தெய்வீக வாழ்க்கையின் ஒளி எங்கும் பரவட்டும். உங்கள் வீடுகள், பொதுத் தொண்டுகள், நகரங்கள், கிராமங்கள், இவைகளில் தெய்வீக வாழ்க்கையின் ஒளி ஊடுருவட்டும். விழுமிய குறிக்கோள்கள், தெய்வீக வாழ்க்கை இவற்றின் ஒளி நம் கல்வி முறையில் ஊடுருவட்டும். அப்பழுக்கற்ற தூய்மை, குற்றமற்ற ஒழுக்கம், நடைமுறை ஆன்மீகம், ஒளி பெற்ற தோற்றம் இவற்றின் வீரப் பிரதிநிதிகளாக நம் இளைஞர்கள் திகழட்டும். தேசம் முழுவதற்கும் ஏன் உலகமெங்கும் ஒளி பெருக்கிப் பரப்பும் ஜோதி மையங்களாக பாட்னாவும், பீஹாரும் விளங்கட்டும். தன்னலமற்றசேவை, அன்பு இவற்றின் உருவகமாகத் திகழும் பெரியவர் ராஜேந்திரப்பிரசாத் பாபுவை இந்தியாவின் முதல் ஜனாதிபதியாக அளித்த மாநிலம் பீஹார். இந்திய ஆன்மீக ஜோதியை தூக்கிப் பிடித்துக்கொண்டு நாளைய இந்தியா முழுவதும் ஒளியைப் பரப்பக்கூடிய சிறந்த எழுச்சி பெற்ற இளைஞர் குழாம் ஒன்றை உருவாக்கட்டும். இந்த மகத்தான முயற்சியின் முடிவு ஆனந்தம், அமைதி, எல்லோருக்கும் நலம் இவைகளாக அமையட்டும்.

அசோகரின் தர்ம சக்கரம் இன்று சுதந்திர பாரதத்தின் சின்னமாக விளங்குகிறது. இந்த அசோக சக்கரவர்த்தியின் பண்டைய மகத நாட்டின் பெரும் புகழுக்கு நீங்கள் வாரிசுகள் என்பதை நினைவுபடுத்திக்கொள்ளுங்கள். எனவே, உண்மை, அறம், நன்மை, அன்பு, சகோதரத்துவம், சேவை இவைகளை எங்கும் வேகமாகப் பரவும்படி,

இந்த தர்மச் சக்கரம் மீண்டும் இந்த நாட்டில் சுழலச் செய்யவேண்டியது உங்கள் நோக்கமாக இருக்கட்டும். இதில் நிச்சயமான வெற்றியைக் கொடுத்து ஆண்டவன் உங்களை ஆசீர்வதிப்பாராக!

## 2. அமைதியின் செய்தி

*[அக்டோபர் 1940ல் கல்கத்தா வானொலியில் ஒலி பரப்பப்பட்டது.]*

சாந்தி, ஆண்டவன், ஆத்மா, பிரம்மம், விடுதலை, அமரத்துவம், வீடுபேறு இச்சொற்கள் அனைத்தும் ஒரே பொருளைக் குறிக்கின்றன. அறமும், அமைதியும் ஒன்றையொன்று தழுவி நிற்கின்றன. அன்பும் அமைதியும் ஒன்றையொன்று அணைத்துக் கொண்டிருக்கின்றன. அமைதியும் ஒற்றுமையும் கைகோர்த்துச் செல்கின்றன. தன்னலமின்மையும், அமைதியும் ஒன்றை ஒன்று சார்ந்திருக்கின்றன. ஆண்டவனிடம் அன்பில்லாமல் அமைதியிருக்க முடியாது.

அமைதி சாம்ராஜ்யம், சொல், சிந்தனை, கற்பனை இவற்றிற்கு அப்பாற்பட்டது. பொறுமையான ஆன்மீகப் பயிற்சிமூலம்தான் இந்த சாம்ராஜ்யத்தை அடையமுடியும். அமைதி என்பது, செயலற்ற ஜடத்தன்மையல்ல. அது வசீகர மயக்க நிலையில்லை. அது எதிர்மறை மனநிலை இல்லை. அமைதி என்பது நேர்நிலை ஆன்மீகப் பேறுகும். அமைதி உங்கள் குறிக்கோளாக, இலக்காக, அடையவேண்டிய மையமாக அமையவேண்டும். அமைதி மனித வாழ்வின் இயக்க மையம். அது ஆன்மாவின் அபிலாஷை. முழுமையான விழிப்பு நிலையும் அதுவே. சுத்த ஆன்மா, மிக உயர்ந்த தெய்வீக ஞானத்தையும், தெய்வீக ஆனந்தத்தையும்,

அனுபவிக்கும் ஓர் மகத்தான நிலையாக அமைதி அமைகிறது. தனி மனிதன், பரமாத்மாவுடன் தொடர்புகொண்டிருக்கும் நிலை அது. இந்த அமைதி அமிர்தத்தைப் பருகுபவன், ஆசை, பயம் இவை அறவே அற்ற நிலையை எய்துகிறான்.

சாந்தி உங்களின் பிறப்புரிமை. அமைதி உங்களின் உள்ளும் புறமும் நிறைந்திருக்கிறது. உங்களுக்கு முன்னால், பின்னால், வலப்புறம், இடப் புறம், மேலே, கீழே எங்கும் அமைதி வியாபித்திருக் கிறது. உயிர்த்துடிப்புள்ள ஒரே உண்மை சாந்தியே! பெயரும், உருவமும் மாயை. இந்த அமைதியை உணர்ந்து விடுதலை பெறுங்கள். மகிழ்ச்சியையும், அழியா ஆனந்தத்தையும் அளிக்கும் அமைதியின் சக்தி ஆச்சரியகரமானது.

வேற்றுமைகள், சண்டை சச்சரவுகள், கொந்தளிப்பு, கூப்பாடு இவை இல்லாதநிலை மட்டும் அமைதி என்பதில்லை. புறப்பொருட்களி லிருந்து பெறப்படுவதல்ல அமைதி. வேண்டாத் தகாதவைகள் நீக்கப்பட்ட சுற்றுப்புறமோ அல்லது, நிலையோ அல்ல அது. ரிஷிகேசத்தில் உள்ள தனிமையான ஒரு குகையில் வசிக்கும் மூன்று சாதுக்கள், தங்களுக்குள் சண்டைபோட்டுக் கொண்டு, பொறாமை, வெறுப்பு, காழ்ப்பு, இவற்றைத் தங்கள் உள்ளங்களில் வளர்த்துக் கொண்டிருப்பார்களேயானால், அவர்கள் ரிஷிகேசத் தின் மிகவும் அமைதியான, சலனமற்ற சூழ்நிலை முழுவதையுமே மாசுபடுத்தி விடுவார்கள்.

## அக அமைதி

நீங்கள் மிகவும் பாதகமான சூழ்நிலையில் இருக்கலாம். தூண்டுதல்கள், தொல்லைகள், பதட்டங்கள், கஷ்டங்கள், துக்கங்கள் இவைகளின்

நடுவே இருந்தபோதிலும், நீங்கள் மனதை அலை பாயாமல் நிறுத்தி அதன் மாசுகளைப் போக்கி அதன் மூலம் உங்கள் இந்திரியங்களை அடக்கி, ஆண்டவனிடம் ஒன்றினால், உங்கள் உள்ளத்தில் அமைதியையும், இணக்கத்தையும் அனுபவிக்க முடியும். ஏசுபிரான் பல வகைகளில் துன்பப் படுத்தப்பட்டார். அவரை சிலுவையில் அறைந்து கொன்றார்கள். இருப்பினும் அவர் என்ன சொன்னார்? ''ஆண்டவனே! அவர்களை மன்னித் தருளுங்கள். அவர்கள் என்ன செய்கிறார்கள் என் பதை அவர்கள் அறிந்திலர்'' என்றார் ஏசுபிரான். தனது உயிரே பணயமாயிருந்த நேரத்திலும் அவர் எவ்வளவு அமைதியாய் இருந்தார். அவர் உள்ளத் தில் சாந்தியை அனுபவித்துக்கொண்டிருந்தார். எனவே எந்தவிதமான பதட்டங்களும், கவர்ச்சி களும் அவரைத் தொடமுடியாது.

எல்லா மதநூல்களும் அறிவிப்பதாவது :–

விருப்பு வெறுப்பற்ற புலன்களுடன், உலக விஷயங்களில் ஈடுபட்டிருக்கும் ஒழுக்கக் கட்டுப் பாடுள்ள ஆன்மா அமைதியை அடைகிறது. எல்லாத் துன்பங்களையும் துடைக்கும், சக்தி இந்த அமைதியிலிருந்து அவருக்கு ஏற்படுகிறது. ஏனென்றால், அமைதியான உள்ள முடையவனுக்கு, விரைவிலேயே, பகுத்தறிவு சம்நிலைப்படுகிறது. இசைவற்ற இதயமுடையவர் களிடம் தூய்மையான பகுத்தறிவு இல்லை. அவர் களுக்கு மன ஒருமைப்பாடும் இல்லை. மன ஒருமைப் பாடில்லாததினால், அவர்களுக்கு மனச்சாந்தியில்லை. மனச்சஞ்சலமுடையவனுக்கு, மகிழ்ச்சியேது? யாரொருவன், ஆசைகளை அறவே ஒழித்து காமம், தன்னலம், ஆணவம், இவற்றிலிருந்து விடுபட்டு முன்னேறுகிறானோ அவன் சாந்தியை அடைகிறான்.

முழு இறை நம்பிக்கையுடையவன், ஞானத்தைப் பெறுகிருன், தன்னுடைய புலன்களை வெற்றி கொள்கிருன். ஞானத்தைப் பெற்றதன் பலனுக பரமானந்தத்தை அடைகிருன். ஆசை கோபம் இவைகளிடமிருந்து விடுபட்டும், தன்னை அறிந்தும், உள்ளடங்கிய சிந்தனையுடன், இயற்கையுடன் ஒன்றியும் உள்ளவனுக்கு அழிவற்ற ஆனந்தம் அருகாமையில் உள்ளது''.

## அமைதியை எங்கே காண்பது?

அமைதி வேண்டுமென்று மக்கள் தவிக்கிருர்கள். எங்கே, யார் மூலம் அதைப் பெறுவது? முறையான தியானம், முனிவர்கள், ஆன்மீக ஆசான்கள் இவர்களுடன் தொடர்பு இவைகள் மூலம் தங்கள் உள்ளத்தில் அமைதியைப் பெற முடியும். அமைதியை அகத்தில்தான் பெறமுடியும். புறப்பொருட்களில் அதைக்காண முடியாது என்பது நிச்சயம். பொன், பெண், குழந்தைகள், சொத்துக்கள் அரண்மனை போன்ற பெரும் கட்டிடங்கள் இவையெல்லாம் அழியா ஆனந்தத்தைக் கொடுக்க மாட்டா. உங்கள் நோக்கம் உங்கள் உட்புறம் செல்லட்டும். உங்கள் இதயத்துறையும் தலை சிறந்த ஆன்ம ஞானம் இவற்றுடன் நீங்கள் ஒன்றியிருப்பதை உணருங்கள். உங்கள் உள்ளத்துறையும் உயர்ந்த பரமாத்மாவுடன், நீங்கள் நிலை பெற்றிருக்கும் பொழுது, கடினமான துக்கம், நஷ்டம், தோல்வி, இசைவற்ற ஒவ்வாத அதிர்வுகள் இவை ஒன்றுலும் உங்களை அசைக்க முடியாது. எல்லாக் கஷ்டங்களையும், வாழ்க்கையில் ஏற்படும் இக்கட்டான பிரச்சனைகளையும், சுலபமாகக் கடந்து வாழ்க்கை அனுபவம் அனைத்திலும் வெற்றி பெற்று விளங்குவீர்கள். இந்த சாந்தி ஆச்சரியகரமானது. இந்த சாந்தி ஒப்பற்றது. புரிந்துகொள்வதற்கு

அப்பாற்பட்ட இந்த சாந்தியை உணர்ந்து, விடுதலை பெறுங்கள். இந்த அமைதிக் கடலில் மிதந்து, உங்கள் ஆத்ம ஆனந்தத்தில் திளையுங்கள். இந்த சாந்தி உங்களனைவரையும் வழி நடத்தட்டும். இந்த சாந்தியே, உங்கள் நோக்கம், மையம், இலக்கு இவைகளாக அமையட்டும்

சலனமற்ற நிலையில்தான் இந்த அமைதியைக் காணமுடியும். ஒரு அறையில், அரைமணி முதல் ஒரு மணி நேரம் வரை அமர்ந்திருங்கள். கண்களை மூடிக்கொள்ளுங்கள். தசைகளையும், நரம்புகளையும் தளர்த்துங்கள். புருவ மத்தியில் எண்ணங்களை ஒரு நிலைப்படுத்துங்கள். புலன்களையும், மனத்தையும் புற விஷயங்களிலிருந்து விலக்கிக் கொள்ளுங்கள். அலைமோதும் உணர்ச்சிகளையும், பீரிட்டு எழும் எண்ணங்களையும் அமைதிப்படுத்துங்கள். உலகையும், உடலையும் மறந்துவிடுங்கள். பேரமைதி என்ற மிக உயர்ந்த ஆன்மீக ரகசியத்தில் நுழையுங்கள். உங்கள் உள்மனத்தின் ஆழத்தில் உள்ள அமைதியில் சாந்தஸ்வரூபியான ஆண்டவனைக் காண்பீர்கள். குளிர் காலத்தில் தினம் நான்கு முறையும், கோடை காலத்தில் தினம் இரண்டு முறையும் இப்படிச் செய்யுங்கள். உங்கள் பயிற்சியை ஒழுங்காகச் செய்யுங்கள். ஒழுங்காகச் செய்தல் மிக மிக முக்கியம். உங்கள் பயிற்சியில் நீங்கள் ஒழுங்காக இருந்தால்தான் நீங்கள் ஆன்மீகத்தில் வளர முடியும். நீங்கள் சாந்தியை அனுபவித்தால்தான், உங்களால் சாந்தியை உலகிற்கு அளிக்க முடியும்.

## சாந்தியை அடைவது எப்படி?

எல்லா ஆசைகளையும் அடக்கி, பொங்கிவரும் எண்ணங்களை அமைதிப்படுத்தி அறிவிற்கப்பாற்பட்ட ஆனந்தத்தை அடையுங்கள். ஆன்மீக தியானத்தின்

மூலம், அளப்பரிய ஆனந்த சாம்ராஜ்யத்தை அதாவது உள்ளத்திலே அமைதி சாம்ராஜ்யத்தை அடையுங்கள். உங்கள் மனதை உங்களால், அடக்க முடிந்தால், நீங்கள் பெரும் காற்றையும், புயலையும், பொங்கிவரும் கடலையும் அடக்கலாம். அமைதிக் கடலில் வீற்றிருங்கள். உங்கள் அந்தராத்மாவில் வேரூன்றி இருங்கள். அப்படியிருக்கும்பொழுது தான், வெறுப்பு, எரிச்சல், பொறாமை, இசைவற்ற தன்மை, சச்சரவு, அழிவு முதலிய இருட்சக்திகளை உங்களால் அழிக்கமுடியும்.

கோபம், பேராசை, பொறாமை, வெறுப்பு இவையனைத்தும் அமைதியின் விரோதிகள். நல்லெண்ணம், ஒத்துழைப்பு, இரக்கம், பரிவு, நமக்குத் துன்பம் செய்தவருக்கும் திரும்பத் தீங்கு செய்யாதிருத்தல், மன்னித்தல், திருப்தியடைதல், பெருந்தன்மை, புவனம் தழுவிய அன்பு போன்ற நற்பண்புகளை வளர்த்துக்கொள்ளுங் கள். உனக்கு தீங்கிழைத்தவன் நலனுக்குப் பிரார்த்தனை செய். நீங்கள் தியானத்திற்கோ, பிரார்த்தனைக்கோ அமரும்பொழுது, சாந்தி, நல்லெண்ணம் முதலிய சிந்தனை அலைகளை உங்கள் விரோதிகள் உட்பட்ட உலகம் முழுவதற்கும் அனுப்புங்கள்.

தன்னலம், பேராசை, ஆணவம் இவற்றை நீங்கள் அழித்துவிட்டால், இயற்கையே உங்களுக் காக வேலை செய்யும். இயற்கையுடன் நீங்கள் ஒத்துழைத்தால் உங்கள் சுமையை இயற்கை தன் தலையில் தூக்கிச் சுமக்கிறது. நீங்கள் அமைதியாக வாழலாம். ஆசைகள், தொந்திரவுகள், கவலைகள், பொறுப்புக்கள், பயம் இவைகளிலிருந்து நீங்கள் விடுபடுவீர்கள். உங்கள் தனிப்பட்ட சிந்தனை, புவனம் தழுவிய பெரும் சிந்தனையுடன் ஒன்றுகிறது.

புவனத்துடன் ஒருவனுடைய நோக்கம் ஒன்றி விட்டால், அனைத்தும் அவனுக்கு சுலபமாகிறது. சாதனை நாலுகால் பாய்ச்சலில் முன்னேறும். தடைகளோ, தடங்கல்களோ அவன் வழியில் இருக்காது. இயற்கை அவனுக்காக அத்தனையும் செய்யும். தன்னல நோக்கங்களையும், ஆர்வங்களையும் ஆண்டவனின் சித்தத்திடம் எவன் சரணாகதி செய்கிறானோ அவன் பரம சாந்தியையும், அழிவில்லா ஆனந்தத்தையும் அடைகிறான்.

## சாந்தி ஒளிரட்டும்

ஆதர்ச அமைதி வாழ்க்கையை வாழுங்கள். சந்தேகம், எல்லா வகை காழ்ப்பு உணர்ச்சிகள், பொறாமை, தன்னலம், பதவி மோகம், சொத்து ஆசை இவைகளை ஈவிரக்கமின்றி அழியுங்கள். தினந்தோறும் தியானம் பழகி, உங்கள் இதயத்தில் சாந்தியை நிறுவுங்கள். பிறகு அதை உங்கள் அண்டை அயலாருக்கும், மற்றும் உங்களுடன் தொடர்புகொள்பவர்கள் அனைவருக்கும் பிரதிபலியுங்கள். பரந்து விரிந்த உலகெங்கும் அதைப் பரப்புங்கள். உலகிலுள்ள ஆண்கள் பெண்கள் அனைவருக்கும் அமைதியின் செய்தியை பிரசாரம் செய்யுங்கள். இடைவிடாமல் தியானம் செய்வதின் மூலம் துன்பக்கடலைக் கடந்து, அக்கரையாகிய, அமைதி, தைரியம், அமரத்துவம் இவைகளை அடையுங்கள். எல்லாத் தன்னல முயற்சிகளையும் விட்டொழித்து, அமைதியற்ற வாழ்விலிருந்து உங்களை விடுவித்துக்கொள்ளுங்கள்.

சாதுக்கள், மகாத்மாக்கள், இவர்களின் சத்சங்கம் உலக மாசுகளனைத்தையும் அழித்து, மோக்ஷத்தின் கதவுகளை அகலமாகத் திறக்கின்றன. மோக்ஷ சாம்ராஜ்யத்தின் வாயிற்காப்பாளனாக

சத்சங்கம் விளங்குகிறது. சத்சங்கத்துடன் நீங்கள் நட்புக்கொண்டிருந்தால் உங்களுக்கு சாந்தி, விசாரம், பகுத்தறிவு இவற்றுடன் நட்பு சுலபமாக ஏற்பட்டு, பிறகு அழியா ஆனந்தம், அமைதி சாந்தி இவற்றின் அளப்பரிய சாம்ராஜ்யத்தில் வெகு எளிதாகப் பிரவேசிக்கிறீர்கள்.

ஸ்ரீராமன் இல்லாமல் உங்களுக்கு சாந்தி கிடையாது. ராமனை நினைந்து, ராம நாமத்தைப் பாடும் மனிதன்தான் எத்தனை பாக்கியவானாகவும், மகிழ்ச்சியுடையவனாகவும் இருக்கிறான்! எந்தவித வேட்கையோ, கவலையோ, பயமோ, துன்பமோ, கஷ்டமோ, பதட்டமோ ராம பக்தனை அணுகா! பக்தனுடைய உடலைப் பேணி அவனுடைய உலகத் தேவைகளனைத்தையும், ஸ்ரீராமன் அளிக்கிறார். எழுமின்! காண்மின் ஸ்ரீராமன் எவ்வளவு கருணை உள்ளவராய் இருக்கிறார் என்பதை! அவருடைய பாத கமலங்களைப் பற்றிக்கொள்ளுங்கள்.

## சலனமற்றிரு

பொன்னெறியாகிய, அன்புத் தெய்வ நெறியில் வாழுங்கள். உங்கள் விஷயங்கள் இசைபட அமைய முயற்சி செய்யுங்கள். உங்கள் இதயத்தில் அமைதி சாம்ராஜ்யத்தை முதலில் நிறுவுங்கள். தனிமனிதனின் மன அமைதிதான் உலக சாந்திக்கு வழி வகுக்கிறது. உங்கள் உள்ளத்தில் அமைதியைப் பெறுவதுதான் நீங்கள் மனிதவர்க்கத்திற்குச் செய்யும் மிகப்பெரிய பணி. அறிவுக்கப்பாற்பட்ட அமைதியை எவனொருவன் உணருகிறானோ, அவன் உலகத்திலுள்ள மூலை முடுக்குகளிலெல்லாம் அதைப் பரப்புகிறான். அவனுடன் தொடர்பு கொண்டவர்கள், அவனது இனிமையான, ஆன்மீக எழுச்சி அளிக்கக் கூடிய, இசைவான அதிர்வுகளால் ஆக்கம்

பெறுகிறுர்கள் அவன் சந்நிதானத்தில் வெறுப்பு மறைகிறது.

சலனமற்றிரு. தெய்வீக எண்ணத்துடன் லயித்திரு. எல்லாக்கவலைகளையும் போக்கிவிடு. எல்லா வேட்கைகளையும், ஆர்வங்களையும் வெளியே எறி. உன் ஆழ் மனத்திற்குள் ஆழ மூழ்கி, அமைதிக் கடலில் அமிழ்ந்து விடு.

காமம், வெறுப்பு, பேராசை. தன்னலம், பொறுமை முதலிய களைகளை உங்கள் இதயத்தோட்டத்திலிருந்து நீக்கி, அங்கு முதலில் அமைதியைப் பயிரிடுங்கள். அப்பொழுதுதான் அமைதி புறத்தே வெளிப்பட முடியும். அப்படி வெளிப்படும் பொழுதுதான், உங்களுடைய சாந்தி, இசைவு இவைகளின் அதிர்வுகளால், உங்களைச் சார்ந்திருப்பவர்களுக்கு பயன் கிடைக்கும்.

அமைதி நிலையில் தெய்வீக ரகசிய மெல்லொலியைக்கேளுங்கள். , நம்பிக்கையின் சக்தியை உணருங்கள். கடவுளின் கருணை தொடர்ந்து பாய்வதை உணருங்கள். அமைதியின்மையிலிருந்து தப்பித்துக் கொள்ளும் வழியை அறியுங்கள். அன்பு ஆலயத்தையும், பக்திக்கோவிலையும், உங்கள் இதயத்தில் நிர்மாணியுங்கள். அமைதியில் பிரவேசித்து, ஆழ் நிலை வாழ்க்கையை அனுபவியுங்கள். அந்தர்முக வாழ்க்கையை வாழுங்கள். ஆன்மாவிடம் ஐக்கியமாகுங்கள். ஆன்மாவை அறிந்து கொள்ளுங்கள். அதாகவே ஆகுங்கள். விடுதலை பெறுங்கள். மகிழ்ச்சிகரமாக உலாவுங்கள்.

## எல்லாத் தளைகளையும் உடைத்தெறியுங்கள்

பணக்காரர்களிடம் ஏகப்பட்ட செல்வம் இருக்கிறது. அவர்களுக்கு வசதிகள் எல்லாம் இருக்கின்றன. சொகுசான சூழ்நிலையில் சோம்பலான

வாழ்க்கையை நடத்துகின்றனர். பெருமைப்படத் தக்க கார்கள், அழகான பங்களாக்கள், வேலையாட்கள் முதலியன அவர்களிடம் உள்ளன. அவர்கள் தேர்ந்தெடுத்த அறுசுவை உண்டிகளையும், ருசிகரமான உணவுகளையும் உண்கின்றனர். கோடை காலத்தில் மலைவாசஸ்தலங்களுக்குச் செல்கின்றனர். இருந்தபோதிலும் அவர்களுக்கு மன அமைதி இல்லை. ஏனெனில், அவர்களுக்கு உள்ளத்தில் இசைவான நிம்மதியில்லை. பேராசை, தன்னலம், ஆணவம், காமம், கர்வம், வெறுப்பு, கோபம், பயம், கவலை முதலியவற்ருல் அவர்கள் இதயத்தில் பிணக்கு இருக்கிறது. புற இசைவும், அமைதியும், உண்மையான மனமகிழ்ச்சியைக் கொடுக்காது. ஆண்டவன் அளிக்கும் சாந்தி ஓர் உள் மன அனுபூதி. புறத்தே சாதகமான சூழ்நிலை இல்லாமலும், பணத்தின் உதவியில்லாமலும் அதை நீங்கள் பெற முடியும்.

இரட்டை வாழ்க்கை, அமைதியின்மை, அதிருப்தி, மன அமைதியின்மை இவைகளுடன் எத்தனை நாட்கள் நீங்கள் வாழப்போகிறீர்கள்? அறியாமை, கசப்பு, வெறுப்பு, பிரிவினை, இவைகளையுடைய வாழ்க்கையை எத்தனை காலம் நடத்தப் போகிறீர்கள்? உங்கள் தன்னலப் போராட்டத்தை எத்தனை காலம் தொடரப் போகிறீர்கள்? எத்தனை காலம் வித்தியாசங்களையும், வேறுபாடுகளையும் மட்டும் கண்டுகொண்டேயிருக்கப் போகிறீர்கள்? மனிதர்களுக்கிடையே இன்னும் எத்தனை காலம் தடைகளாக இருந்துகொண்டிருக்க விரும்புகிறீர்கள்?

ஆபத்தான சம்சாரக் கொடும் காட்டில், வழி தெரியாமல் அலைந்து கொண்டிருப்பவர்களே! ஸ்ரீ ராமனிடம் சரண் அடையுங்கள். ஸ்ரீ ராமனே

உங்களுக்கு ஒரே ஆதரவும், புகலிடமுமாகும்! உண்மையான நண்பன் இந்த உலகில் யாருமில்லை. புலன் விஷயங்களின், ஏமாற்று ஜொலிப்பில் ஏமாந்து போகாதீர்கள். அவை ஒரு காசு பெறுதவை! அழியக்கூடியவை! அஞ்ஞான இருளிலிருந்து எழுமின்! உங்கள் பயணத்தை துரிதமாகச் செயல்படுங்கள். முன்னேறுங்கள்! பகல், இரவு, மாதம், வருடம் என்று காலம் ஓடிக்கொண்டேயிருக்கிறது.

## அகத்தில் உள்ள அமைதி

கஸ்தூரி மானுக்கு, கஸ்தூரி மணம் அதன் உடலிலிருந்துதான் வருகிறது என்பது தெரியாது. இந்த மணத்தின் உற்பத்தி ஸ்தானத்தை அறிய அது அங்கும் இங்கும் அலைகிறது. அதேபோல், அறியாமையினுல், ஏமாற்றப்பட்ட ஜீவன், தன்னுள்ளே உள்ள ஆன்மாதான் ஆனந்தத்தின் ஊற்று என்பதை அறிவதில்லை. ஆனந்தத்தைப் பெறுவதற்கு அழியக்கூடிய புறப்பொருள்களைத் தேடி அதன்பின் ஜீவன் ஓடுகிறது. மனிதனின் உயர்ந்த முடிவு நிலையென்ன? எல்லாச் செயல்களிலிருந்தும் ஆனந்தத்தை பெற வேண்டும் என்பதே மனிதனின் குறிக்கோள் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்கின்றனர். எனவே அழியா ஆனந்தத்தை அடைவதே மனிதனின் உயர்ந்த முடிவு நிலையாக இருக்க வேண்டும். இதை உள்ளுறையும் ஆன்மாவில்தான் அடைய முடியும். புறப்பொருள்களின் தொடர்பால் வரும் ஆனந்தம் தற்காலிகமானதும், ஏமாற்றமுடையதுமாகும், அது கவலைகள், துன்பம், பயம், பாவம் இவை கலந்ததாக இருக்கிறது.

முழுப்பாதுகாப்பும், முழுமையான சாந்தியும் இந்த உலகில் பெறமுடியாது. ஏனென்றால் இது ஒரு பரிணும நிலைதான். எல்லாப் பொருட்களும்

கால, தேச, வர்த்தமானத்தால் கட்டுப்பட்டவை. அவை அழியும் தன்மையுடையன. அப்படி இருக்கும் பொழுது முழுப்பாதுகாப்பையும், முழுமையான சாந்தியையும் எங்கே காணமுடியும்? அழியா ஆன்மாவிடம்தான் அதைக் காணமுடியும். ஆன்மா சாந்தியின் உறைவிடம். ஆன்மா கால தேச வர்த்தமானத்திற்கு அப்பாற்பட்டது.

எங்கும் அமைதியின்மை இருக்கிறது. தன்னலம், பேராசை, கோபம், காமம் இவை பாழாக்கிக் கொண்டிருக்கின்றன. சண்டைகள், மோதல்கள், சில்லரைச் சச்சரவுகள், இவை சூழ்நிலையைப் பாதித்து, பிணக்கு, இசைவின்மை, அமைதியின்மை இவைகளைத் தோற்றுவிக்கின்றன. மாறுக, ஒற்றுமை, இசைவு, சாந்தி இவற்றை உண்டாக்கவும், மனித இனத்தின் கஷ்டங்களுக்கெல்லாம், காரணமான, கடுமையான அஞ்ஞானத்தைப் போக்கவும், தெய்வீக, ஆன்மீக ஞானத்தைப் பரப்பவும், மக்கள் இதயத்தில் பக்தியைப் புகுத்தவும், அமைதி இயக்கம் ஓசைப்படாமல் செயல்பட்டு வருகின்றது. இப்புவனம் ஓர் புதிர். இதைவிடப் பெரும் புதிரானது, ஒருபுறம் உணர்ச்சிக்கு அடிமையான மக்களைப் பிணக்குகளைத் தோற்றுவிக்கும்படிச் செய்தும், மறுபுறம் தூய்மையானவர்களைக் கொண்டு ஆன்மீக ஞானத்தைப் பரப்பி, துன்பப் படும் மனித குலத்திற்கு அமைதியை அளிக்க, சாந்தி மையங்களைத் தொடங்கச் செய்யும், கண்ணுக்குப் புலப்படாத ஆண்டவனின் திரு விளையாடலாகும்.

கீழ் திசையிலும், மேற்கேயும், தெற்கிலும், வடக்கிலும், மேலும், கீழும் எங்கும் சாந்தி நிலவட்டும். புவனம் அனைத்திலுமுள்ள எல்லா உயிரினங்களுக்கும் சாந்தி கிட்டுவதாக!

ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!

## 3. தர்மத்தைப்பற்றிய எனது கருத்துக்கள்

*[2–10–1950-ல் விஜயவாடா வானொலியிலிருந்து ஒலிபரப்பப்பட்டது.]*

ஆசீர்வதிக்கப்பட்ட அமர ஆத்மனே!

உலகம் தழுவிய சகோதரத்துவம், மனித குலத்தின் ஒருமைப்பாடு என்ற விதைகளிலிருந்து தோன்றிய, ஆன்மீகம், தெய்வக் காட்சி என்ற கனிகள் நிறைந்து, சகிப்புத்தன்மை, ஒழுக்கம், அன்பு நல்லியல்புகள் என்ற நறுமலர்களின் மணம் சூழ்ந்திருக்கும் நந்தவனமாகத் திகழ்வது இந்திய நாடு. இந்தியா தனது சிறந்த பாரம்பரியத்தினுல் எல்லோருக்கும் நல்வழி காட்ட முடியும். மேலும் அனைவரையும், செல்வம், சாந்தி, அழியா ஆனந்தம் இவற்றிற்கு இட்டுச் செல்லவும் முடியும். இந்திய தேசியத் தகுதி, ஆன்மீகப் பண்பாடு, நிலையான அமைதியைப்பெற பண்டைய இந்தியாவின் நிரூபிக்கப்பட்ட மார்க்கங்கள், பாரதத்தின் ஆக்க பூர்வமான சிறப்பு இவை மனிதகுலத்தின் விதியை வழிநடாத்த முடியும். ஆன்மீக ஜோதியை உயர்த்திப் பிடிக்கும் பணியே இந்திய நாட்டின் மரபும், கட்டளையுமாகும் ஓர் ராமன் அல்லது யுதிஷ்டிரன் இவர்களை முன்னேடியாகக் கொள்வதே இப்பணி தொடர்ந்து செவ்வனே நடந்தேற சீரிய மார்க்கமாக அமையும். இந்தியா தர்மபூமி. இந்தியாவின் மூச்சே தர்மம். இந்தியாவின் ஒளியும் உயிரும் தர்மம். தர்மத்திலே ஊன்றி, தர்மமாகவே உருவெடுத்த தேசம் இந்தியா. தர்மம் இந்தியாவைக் காக்கும். இந்தியா தர்மத்தைக் காக்கும்.

உலகாயத நாகரீகம் எங்கும் பரவியுள்ள இந்தக் காலத்தில், ஸ்மிருதி, ஸ்ருதி இவைகளில்

கூறப்பட்டிருக்கும் சமுதாயக் கட்டுப்பாடுகள், புறவாழ்க்கை நெறிகள், இவை எப்படி, எவ்வளவு தூரம் சுலபமாக அமல் செய்யப்பட முடியும் என்பது விவாதத்திற்குரிய ஓர் பிரச்னை. இருந்த போதிலும், பழமையை எதிர்த்துப் புரட்சி செய்யும் முகமாக எல்லா ஆன்மீகத் தடைகளையும் முழுமையாகப் புறக்கணித்து, முற்றிலும் உலகாயதக் கொள்கையைப் பின்பற்றுவது அர்த்தமற்றது. பழமை, புதுமை இவ்விரண்டு வழிகளுக்கும் இடையே, பழமையிலும், புதுமையிலும் உள்ள சிறப்புக்களை இணைத்து, ஓர் பொன்னுன நடுவழி இருக்க வேண்டும், இருக்கிறது. நடுநிலைப் பாதையைக் காணச் செய்யப்படும் பாராட்டத்தக்க, உண்மையான, துணிவுடைய, ஆராய்ச்சியில், உலக வாழ்க்கையிலிருந்து தத்துவ பூர்வமாக விலகியிருந்து, அதே சமயத்தில் உலக வாழ்க்கையின் மேல் பற்றற்ற அன்பு கொண்டு, அதை விமர்சனம் செய்ய பயிற்சியும், வசதியும், பெற்றிருந்த மகான்கள், மகரிஷிகள், இவர்களின் அறிவுரைகளை நாம் வரவேற்க வேண்டுமென்பதை வலியுறுத்தத் தேவையில்லை.

எல்லா தேச மக்களின் முடிவான குறிக்கோளும், அவர்களுடைய பயணத்தின் உட்பொருளும் ஒன்றே. பொது நோக்கம், பொதுவான குறிக்கோள், என்ற அடிப்படையில்தான் பகை, போர், இவற்றிக்குக் காரணமாக அமையும் வித்தியாசங்களுக்கு முற்றுப்புள்ளி வைக்க முடியும். தர்மம் என்பது ஒரு தனிப்பட்ட நபரின் இஷ்டமோ அல்லது ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் சொத்தோ அல்ல. இந்தப் புவனத்தைத்தாங்கி, இயக்கும் அமர ஆணைதான் தர்மம். வினை எதிர்வினைத் தத்துவம், கர்மம், பிறப்பு. இறப்பு, இவை மாற்ற முடியாதவை என்ற கொள்கை, பல்வேறு வகைப்பட்ட உலக

வாழ்க்கையின் செயல்கள் ஒரே சீராக இயங்குவது, இவை தர்மத்தின் பகுதிகளாக அமைகின்றன. பெற்றோர்கள், ஆசிரியர்கள், தன்னலமற்ற சமூகத் தொண்டர்கள், இவர்கள் மக்களின் ஒழுக்கத்தை நெறிப்படுத்துகிறார்கள். இவர்கள் தர்மத்தின் தூண்கள். உண்மையின் உதாரணங்கள் அறவழியின் அவதாரங்கள். வாழ்க்கையின் முழுமையான ஒருமைப்பாடு என்ற கோட்பாட்டிற்குக் கீழ்படிந்து, மக்கள் இந்த அறவழிகளைப் பின்பற்ற வேண்டும். அளவிட முடியாததின் வழியாகிய தர்மம், கணக்கற்ற வழிகளாக உள்ளன. எனினும், அளப்பரிய சிருஷ்டியின் ஒருமைப்பாட்டின் சக்தி என தர்மத்தை வரையறுக்கலாம். ஏனென்றால், பலகோடி தனிப்பட்ட விஷயங்கள் ஒன்றுக்கொன்று வேறுபட்டிருப்பதாகத் தோன்றிய போதிலும், அவைகள் ஒரு பிரிக்கப்பட முடியாத முழுமையின் பகுதிகள் அல்லது இயல்புகளாகத் தர்மத்தினால் பிணைக்கப்பட்டிருக்கின்றன.

''ஏகம் சத் விப்ரஹ பகுதா வதந்தி''

அஹிம்சை, சத்தியம், பிரம்மச்சரியம், அன்பு, சகோதரத்துவம் மற்றும் பெருந்தன்மையான சிறந்த, விழுமிய அறங்கள் இத்தனையும் தர்மத்தின் விளக்கங்களாக அமைகின்றன. தேசத்தின், புவனத்தின் ஏன் அண்டசராசரங்களின் துடிப்பையே இயக்குவது தர்மம்.

ஸ்ரீராமர், யுதிஷ்டிரர், விக்ரமாதித்தர்போன்ற அழியாத் தர்மத்தின் பிரதிநிதிகளின் அமர வாழ்க்கைகளிலும், அரசுகளிலும் விளக்கப்பட்டிருக்கும் வாழ்க்கைக் கலையைப் பின்பற்றும் சிறந்தவர்கள் ஒரு நாட்டில் இருப்பதைப்பொறுத்து அந்த நாட்டின் நலன் அமைகிறது. நமது வாழ்க்கையை மேன்மையான ஆன்மீக முடிவிற்குக் கொண்டு

செல்ல நாம் கடைப்பிடிக்க வேண்டிய வழி தர்மம். மனிதனுள் உறையும் சக்தியையும், உள்ளாற்றலையும், தெய்வீக நிறை நிலையையும், அனுபவிக்கும்படி வாழ்க்கையை அமைத்துக்கொள்வதே மனித தர்மமாகும். அமரத்துவம் அல்லது நிர்வாணத்திற்கு நம்மை வழிநடத்திச் செல்வது தர்மம். நமது சிந்தனை, வாக்கு, செயல், இவை முழுமையான தெய்வீகத்தின் வெளிப்பாடுகளுடன் ஒன்றுவதாக நாம் உணர்வதே இந்த தர்ம வழியாகும். தெய்வீக வாழ்க்கையே தர்மம். முழுமையான ஒழுக்க, அறவாழ்க்கையே தர்மம்.

''ஆத்மவத் சர்வ பூதானி''

தன்னைப்போல் பிறரை நேசிப்பது தர்மம். மனிதகுல உருவில் இருக்கும் மகேசனுக்கு சேவை செய்வதே தர்மம். கொடை, ஓர் தர்மம். பணிவு, புலனடக்கம், மனசுத்தி, ஞானம் ஆண்டவனை தியானித்தல் இவையெல்லாம் தர்மத்தின் சிறந்த வடிவங்கள். ஆன்மீக நோக்கு, ஆன்மீகத் தகுதிகள், முழுமையான நீதி இவற்றின் அடிப்படையில் அமைந்துள்ள கடினமான நல்வாழ்வு வாழ்வது தர்மம். தர்மத்தின் குறிக்கோள் ஆசாரம் அதாவது நன்னடத்தை.

''ஆசார பிபவோ தர்ம:''

ஆசாரத்திலிருந்து தர்மம் பிறக்கிறது. தர்மம் வாழ்க்கையை மேம்படுத்துகிறது. தர்மத்தைக் கடைப்பிடிப்பதினல் மனிதனுக்கு இகத்திலும் பரத்திலும் வளமும் புகழும் கிடைக்கிறது. ஆசாரமே மிக உயர்ந்த தர்மம். எல்லா தபஸ்களுக்கும் மூலம் ஆசாரம். மனிதனுக்கு நலமளிப்பது தர்மம். தர்மம் உலகைத் தாங்குகிறது. தர்மம் மக்களை உயர்த்துகிறது. உயிர்களைக் காத்து ரக்ஷிப்பது தர்மம். தர்மம், ஒருவனை அழிவில்லா ஆனந்தத்திற்கும், அமரத்துவத்திற்கும் இட்டுச் செல்கின்றது.

மதத்திற்கு நுழைவாயில் ஒழுக்கம். ஒழுக்க வாழ்க்கை, அற வாழ்க்கை வாழ்பவன் விடுதலையும் மோக்ஷமும் பெறுகிறான்.

நன்னடத்தையே, உலகாயத ஆன்மீகப் பேறுகளுக்கு மூலமாக அமைகிறது. நன்னடத்தை புகழைப் பெருக்குகிறது. நன்னடத்தை ஆயுளை நீடிக்கிறது, எல்லாத்துன்பங்களையும், கேடுகளையும் அழித்து, நிலையான இன்பத்தை அளிக்கிறது. நன்னடத்தையே நற்பண்புகளைக் கொடுக்கிறது. எனவே நன்னடத்தையைக் கடைப்பிடியுங்கள்.

உங்கள் சுற்றத்தார், நண்பர்கள், குடும்பத்தினர், உற்றார், மற்றார், அனைவருடனும் உங்கள் வாழ்வு இசைபட அமைய அறவாழ்க்கையைக் கடைப்பிடிப்பது உதவும். நிலையான ஆனந்தத்தையும் மோக்ஷத்தையும் அது உங்களுக்கு நல்கும். அறவாழ்க்கை உங்கள் இதயத்தைத் தூய்மைப் படுத்தும். உங்கள் மனசாட்சியை அது எப்பொழுதும் நிர்மலமாக வைத்திருக்கும். அற வாழ்க்கையை வழுவாது வாழும் ஒழுக்கம் படைத்த ஒருவன், தர்மத்திலிருந்து இம்மியும் பிசகமாட்டான். அறத்தைக் கடைப்பிடித்ததால், யுதிஷ்டிரன் அழியாப் புகழ் பெற்றான். அவன் தர்மத்தின் மறு உருவாகத் திகழ்ந்தான். எனவே இன்றும் நம் இதயத்தில் அவன் வாழ்கிறான்.

மதம் நமக்குக் கற்பிக்கும் முதல் பாடம் அனைத்து ஆத்மாக்களும் ஒன்று என்பதே. ஒரே பரமாத்மா எல்லா உயிரினங்களிலும் விளங்குகிறது. உலகம் தழுவிய அன்பே, ஒற்றுமையின் விளக்கம். இந்த ஒற்றுமையினால்தான் எல்லா மனித உறவுகளும் அமைகின்றன. யாக்ஞவல்கியர் தனது மனைவி மைத்திரேயிடம் கூறியதாவது ''அன்பே! இதோ பார்! கணவன் அன்புக்குரியவன் என்பதால் மட்டும் உண்மையில் அவன் நேசிக்கப்பட

வேண்டியவனுவதில்லை. கணவனின் உள்ளுறையும் ஆன்மா நேசிக்கப்பட வேண்டியது என்பதால் அவன் அன்புக்குரியவனுகிறுன். இதேபோல்தான் மனைவி, மக்கள், சொத்து, நண்பர்கள், உலக விஷயங்கள் இவைகளின்மேலுள்ள அன்பு, ஏன் தேவதைகள் மேலுள்ள அன்புகூட இதே வகை தான்''. நீ ஒருவனைப் புண்படுத்தினுல், நீயே உன்னைப் புண்படுத்திக்கொள்வதாக அமைகிறது. நீ ஒருவனுக்கு உதவினுல், நீ உனக்கே உதவி செய்து கொள்வதாகிறது.

''ஈசா வாஸ்யம் இதம் சர்வம்''

எல்லா உயிர்களிடமும் ஒரே உயிர், ஒரே உணர்வு தான் இருக்கிறது. இதுவே நன்னடத்தையின் அஸ்திவாரம். இதுவே அறத்தின் அடிப்படை.

ஈகை ஏன் நியாயமாகிறது? ஏனெனில் ''ஈவது கரவேல்'' என்ற சட்டத்திற்கு அது ஒத்து வருகிறது. திருடுவது ஏன் குற்றம்? ஏனென்றுல் ''திருடாதே'' என்ற சட்டத்திற்கு அது எதிராக இருக்கிறது. ஒருவன் கஷ்டத்திலும், சிக்கலிலும் இருக்கும்பொழுது அவனுக்கு ஏன் உதவவேண்டும்? ஏனெனில் அது உங்கள் நடத்தையை மேம்படுத்தி மெருகேற்றும். அது உங்கள் இதயத்தில் இரக்கத்தைச் சுரக்கச் செய்யும். நற்பண்புகளைப் பேணுவது பரமாத்மாவை அறிய உதவும். உயிர் வதை ஏன் தவறு? ஏனெனில் முடிவு தகுதியற்றது. அது உங்கள் நடத்தையை மாசுபடுத்துகிறது. உயிர்வதை உங்களை ஓர் காட்டுமிராண்டியின் நிலைக்குத் தாழ்த்திவிடும்.

ஒரு மனிதன் இறக்கலாம். ஆனுல் அவன் குணநலங்கள் இறப்பதில்லை. அவனது எண்ணங்கள் மறைவதில்லை. மனிதனுக்கு உண்மையான

சக்தியும், திறமையும் அளிப்பது அவன் குண நலன்களே. குணநலமே சக்தி. நன்னடத்தைத இல்லாமல் ஞானத்தைப் பெற இயலாது. நன் னடத்தை இல்லா மனிதன் இவ்வுலகில் இருந்தும் இறந்தவனே. சமுதாயம் அவனை வெறுத்து ஒதுக்குகிறது. நீங்கள் வாழ்க்கையில் வெற்றி பெற வேண்டுமென்றால், பிறரிடம் செல்வாக்குள்ளவர் களாக விளங்க நினைத்தால், ஆன்மீக நெறியில் முன்னேற விரும்பினால், ஆண்டவனை அடைய ஆசைப்பட்டால், உங்களுக்கு பரிசுத்தமான நன்னடத்தை தேவை. ஒரு மனிதனின் நல் லொழுக்கம், அவன் இறந்த பின்பும் வாழ்கிறது. ஸ்ரீ சங்கரர், புத்தர், ஏசு, சொராஸ்டர், முகமது நபி முதலிய பண்டையப் பெரியோர்கள் இன்றும் நினைவு கூறப்படுகிறார்கள் என்றால், அவர்களுடைய அதிசயமான நல்லொழுக்கமே காரணம். நல் லொழுக்கம் சக்தி வாய்ந்த ஓர் ஆன்மீக சக்தி. பரந்த அளவிற்கு மனத்தைப் பரப்பும் சிறந்த மலருக்கு அதை ஒப்பிடலாம். மேன்மையான பண்புத்திறமும், நல்லொழுக்கமும் உடைய மனிதன் பேராற்றல் வாய்ந்தவனாகிறான். மனிதனின் தனித்தன்மை என்பது நல்லொழுக்கமே. சிறந்த கலைஞனாக, தேர்ந்த பாடகனாக, திறமையான கவிஞனாக மாபெரும் விஞ்ஞானியாக ஒருவன் திகழ லாம். ஆனால் அவனுக்கு நல்லொழுக்கம் இல்லை யேல் அவனுக்கு சமுதாயத்தில் உண்மையான அந்தஸ்து இல்லை.

## ரிஷிகளின் அறிவுரை

பண்டைய ரிஷிகள், தங்களது மாணாக்கர்கள் படிப்பை முடித்துச் செல்லும்பொழுது என்ன அறிவுரை கொடுத்தார்கள் என்பதை கவனியுங்கள். "உண்மையே பேசு. அறம் செய். வேதத்தைப்

பயில்வதிலும், கற்பிப்பதிலும் கவனக் குறைவாக இருக்காதீர்கள். ஆண்டவன், பித்ருக்கள் இவர்களுக்குச் செய்ய வேண்டிய கடமைகளிலிருந்து வழுவாதீர்கள். உங்கள் தாய் உங்களுடைய தெய்வமாக இருக்கட்டும். உங்கள் தகப்பன் உங்களுக்குத் தெய்வமாகத் திகழட்டும். உங்கள் ஆசான் உங்களது ஆண்டவனாக இருக்கட்டும். உங்கள் விருந்தினர் உங்கள் கடவுளாக இருக்கட்டும். தூய்மையான பணிகளையே செய்யுங்கள். மற்றவற்றைச் செய்யாதீர்கள். பெரியோர்களுக்குத் தகுந்த மரியாதை செய்து பேணுங்கள். நம்பிக்கையுடன் கொடுங்கள். நம்பிக்கையில்லாமல் கொடுக்காதீர்கள். ஈகையை சந்தோஷத்துடனும் அடக்கத்துடனும், அன்புடனும் செய்யுங்கள்''.

நீங்கள் மென்மையாகவும், நாகரிகமாகவும், பண்புடனும் இருக்க வேண்டும். நீங்கள் பிறரை மரியாதையுடனும், ஆதரவுடனும் நடத்த வேண்டும். நல்ல பண்பும், இன்சொல்லும், பல கடினமான பிரச்சனைகளைத் தீர்த்திருக்கின்றன. மரியாதை கொடுப்பவன் மரியாதை பெறுகிறான். பணிவு, தானாகவே மரியாதையைக் கொண்டு வருகிறது. மற்றவர்களின் இதயத்தைக் கவரும் ஓர் நற்பண்பு பணிவு. பணிவுள்ள மனிதன் அனைவரையும் ஈர்க்கும் ஒரு சக்தி வாய்ந்த காந்தம் போன்றவன்.

அறம் அமரத்துவமுடையது. சில உலகாயத லாபங்களுக்காக, அறநெறியை விட்டு வழுவாதீர்கள். அறவாழ்க்கையும், களங்கமற்ற உள்ளமும் ஒருவனுக்கு வாழ்விலும் சாவிலும் நிரம்ப நிம்மதியைத் தருகின்றன. பக்தியுள்ள ஒரு மகான், சக்தி வாய்ந்த ஓர் அரசனைவிட மேம்பட்டவன். பக்தனைக் கண்டு பகவான் மகிழ்ச்சி அடைகிறார்.

பகவான் கிருஷ்ணன் கூறுகிறார் ''முழு மனத்துடன் என்னை வழிபடும் கொடுமையான பாவியும் புண்ணியவானாகக் கருதப்பட வேண்டும். ஏனெனில் அவன் உண்மையாகவே பாவத்தை உணர்ந்து, சரியான தீர்மானத்தை எடுத்து விட்டான்''. பலமான தீர்மானத்தோடு ஆன்மீக மார்க்கத்தைக் கடைப்பிடித்தால் கொலை பாதக னுக்குக்கூட நல்லது கிடைக்கச் சிறந்த வாய்ப்பு உள்ளது.

தர்மத்தைக் கடைப்பிடித்து, இறைவனை அடையுங்கள்.

''லோகா ஸமஸ்தா ஸுகினோ பவந்து''

ஆண்டவன் அனைவரையும் ஆசீர்வதிப்பாராக.

## 4. வாய்மையே வெல்லும்

*(24—10—1950-ல் ஹைதராபாத் நிலையத்தில் ஒலிப்பதிவு செய்யப்பட்ட உரை.)*

ஓம்! ஓம்! ஓம்! ஆசீர்வதிக்கப்பட்ட அமர ஆத்மனே! எல்லோருக்கும் சாந்தி கிட்டட்டும்! எந்த ஒரே பரமாத்மா அகில உலகிற்கும் காரண மாகவும், காப்பாற்றுபவனாகவும் விளங்கி, எங்கும் நீக்கமற நிறைந்து, எல்லா உயிர்களிலும் உறை கிறதோ அந்த பரமாத்மாவை வணங்குகிறேன். உலக மாதாவாகிய தேவியைப் போற்றும் நவ ராத்திரி பாரத தேசமெங்கும் சமீபத்தில்தான் கொண்டாடி முடிக்கப்பட்டிருக்கிறது. முதலில் இந்த நவராத்திரி மனித குலத்திற்கு அளிக்கும் செய்தியின் சிறப்புத் தாத்பரியத்தைப் பற்றி ஒரு சில வார்த்தைகள் கூற விரும்புகிறேன். விளக்கத்திற்கும், அறிவிற்கும் அப்பாற்பட்ட ஆண்டவனின் சக்தியே தெய்வீகத் தாய். எல்லா

வற்றையும், படைத்து, காத்து, இறுதியில் அழித் தாட்கொள்ளும் தெய்வீகப் பராசக்தி அவளே! இந்த சக்தியின் வெளிப்பாடே அனைத்துலகமும். எல்லாவற்றையும் இயக்கும் சக்தியாக விளங்கும் தெய்வீக ஆற்றலும் இதுவே. இருள்-ஒளி, நன்மை -தீமை என்ற எதிர்மறை ஜோடிகளுக்கு இடையே நடைபெறும் ஓயாத போராட்டத்தில் பல்வேறு தீய சக்திகளை தெய்வீக ஆற்றல் வெற்றி கொள்வதை மகிழ்ச்சிகரமாக கொண்டாடுவதே இந்த ஒன்பது நாள் தேவி வழிபாடாகும். தெய்வீகமற்றதை, தெய்வீகமே எப்பொழுதும் வெல்லும் என்ற உலக நெறியை நமக்கு மீண்டும் நினைவு படுத்துவதே நவராத்திரியின் தத்துவம். நவராத்திரி என்பது நம் உள்ளத்தில் உள்ள தெய்வீகத்தன்மையை மீண்டும் உணர்ந்து வலியுறுத்தவும், நாத்திகம், மிருகத்தன்மை, முதலிய தீய இருட்சக்திகளை அழித்து வெற்றி கொள்வதற்கு, உண்மை, அன்பு போன்ற ஒளிச்சக்தியை வெளியிடச் செய்யவும், ஆண்டுதோறும் கூறப்படும் எழுச்சியூட்டும் அறை கூவலாகும். ஏனெனில், அன்பு, உண்மை, சகோத ரத்துவம், அனைவருடைய தன்னலமற்ற சேவை போன்ற ஆக்க சக்திகளின் மூலம்தான், தெய்வீகத் தன்மையற்றவைகளை மக்களின் உள்ளம், இதயம் இவற்றிலிருந்து வெற்றிகரமாக ஒழிக்க முடியும். இருளால் ஒரு பொழுதும் ஒளியை எதிர்க்க முடியாது. உண்மை, ஒளி, அறம் இவை ஒரே பொருளைக் குறிக்கும் சொற்கள். ''சத்யமேவ ஜெயதே'' — வாய்மையே வெல்லும் — என்ற நிரந்தர உண்மையான உறுதியை மீண்டும் உங்க ளுக்கு நினைவுபடுத்த விரும்புகிறேன். இது அனைத் துலகிற்கும் பொருந்தும் சட்டம் மட்டுமல்ல, இப் புவியில் உள்ள வாழ்க்கை உண்மையுமாகும். ஆக்க சக்திகள், அழிவு சக்தியை வெல்லவேண்டும், வெல் கிறது. ஆசீர்வதிக்கப்பட்ட தெய்வீக மக்களே!

இந்த உண்மை நிலைக்கு உங்களை உயர்த்திக் கொண்டு, தெய்வீக ஆக்கபூர்வ சக்தியின் இயக்கமாக உங்கள் வாழ்க்கையை அமைத்துக்கொள்ளுங்கள். நீங்கள் அனைவரும், விழுமிய கோட்பாடு, செம்மையான சமநோக்கு, உள்நோக்கமில்லா தன்னலமற்ற தன்மை, பிறருக்கு ஓயாது சேவை செய்தல், முழுமையான பணிவு, இவற்றின் அவதாரமாகத் திகழுங்கள். செம்மையான நல்லொழுக்கம், தூய்மை இவற்றின் அடிப்படையில் உங்கள் வாழ்க்கை அமையட்டும். உங்கள் கோட்பாடும், நல்லியல்பும், உயர்ந்த முறையில் நடைமுறை சாத்தியமாக இருக்கட்டும். இது முக்கியம். இது இன்றியமையாதது. இப்படி நடைமுறை சாத்தியமாக அமைவதினால், நல்லியல்புகள் சக்திவாய்ந்தனவாகவும், பயனுள்ளனவாகவும், வாழ்க்கையை மறுமலர்ச்சி அடையும்படியும் செய்யப்படுகின்றன. நல்லவர்களாயிருங்கள்! நல்லதே செய்யுங்கள்! நல்லதையே படியுங்கள், நல்லதையே பரப்புங்கள்! உலகியல் நோய்க்குத் தீர்வும், தேறுதலும், நமது வாழ்க்கையை தெய்வீக வாழ்க்கையாக வாழ்வதே! நாம் கூறும் சகோதரத்துவம், நடைமுறையில், சகோதரத்துவமாக அமையவேண்டும். இதே கோட்பாடு, நம் அறிவு, இதயம், செயல், இவற்றை ஒருங்கே எழுச்சியுறச் செய்து செயலாற்ற வைக்க வேண்டும். சமத்துவமும், ஒருமைப்பாடும், இவ்வுலகில், நிலையானவைகளாக இருக்கவேண்டுமெனில், இவற்றை விழுமிய அன்பு, உலகந்தழுவிய பரமாத்மா என்ற வழியில் செயல்படுத்தப்பட வேண்டும். தெய்வீகமற்ற முறையிலும், வழியிலும், பெறப்படுபவை இறுதியாக தவிடுபொடியாகி வீழ்வது நிச்சயம். ஏனெனில் தெய்வீகமற்றவை, நிலையற்றவை, அழியக்கூடியவை. தெய்வீகமே சாஸ்வதம்.

## உண்மை வேதாந்திகளாக உருவாகுங்கள்

அன்பு உடன் பிறப்புக்களே! இயற்கை படிப் படியாகத்தான் செயல்படுகிறது என்பது கவனிக்க வேண்டிய மற்ருெரு முக்கியமான விஷயம். எல்லா ஆக்கபூர்வ நடவடிக்கைகளும், சிருஷ்டியும் பரிணும முறையில் செயல்படுகின்றன. மெய்யான வாழ்க்கைக்கும், உண்மையான வளர்ச்சிக்கும், பரிணுமம் வழிகாட்டுகிறது. நிலையான சாதனைகள் பரிணுமத்தின் மூலம் பெறப்படுகின்றன. எனவே, அன்பு, நல்லியல்பு என்ற உறுதியான ஆக்கபூர்வ மான கருவிகள் மூலம் படிப்படியாக எல்லா நற்செயல்களையும் செய்ய முயற்சியுங்கள். நீங்கள் சமத்துவத்தை விரும்பிஞல், நீங்கள் உண்மை யான வேதாந்தியாகி, நீங்களே இப்புவனம் அனைத்துமாக விளங்குவதைக் காணவேண்டும். நீங்கள் சகோதரத்துவத்தை அடைய எண்ணிஞல் பூர்ண அன்பின் உருவங்களாக மின்ன வேண்டும். விஸ்வ-பிரேமை (புவனந்தழுவிய அன்பு) உங்களிட மிருந்து ஒளி வீசட்டும். சந்தோஷத்தையும், நலத் தையும் நீங்கள் விரும்பிஞல், வன்முறையை ஒதுக்கித் தூர எறிந்துவிட்டு, சாந்தி, அமைதி, அஹிம்சை முதலியவை அலை அலையாக மனிதகுலம் முழுமையையும் தழுவச் செய்யுங்கள். சுருங்கக் கூறின், உண்மை, தூய்மை, அன்பு, சேவை, ஆன்மீகம், இவற்றின் அடிப்படையில் தெய்வீக வாழ்வு வாழுங்கள். ஆசை, தன்னலம், பேராசை, கோபம், அகம்பாவம் இவைகள் இல்லாத வாழ்வே தெய்வீக வாழ்வு. சேவை, தியாகம் என்ற அடிப் படையில் மகிழ்ச்சிகரமாகவும், ஆயத்தமாகவும் வாழுங்கள். பொருமை, வெறுப்பு, சந்தேகம், பழிக்குப்பழி, அகம்பாவம், தன்னலம் என்ற களை களை உங்கள் இதயத் தோட்டத்திலிருந்து நீக்கி, அங்கு அன்பைப் பயிரிடுங்கள். தெய்வீகத்துடன்

ஒன்றியிருங்கள். வாழ்க்கையின் உட்பொருள் தன்னலமற்ற சேவை, உலகம் தழுவிய அன்பு. அதன் சத்து, சிந்தை, சொல், செயல் இவற்றின் தூய்மை. அதன் சாரம், பாவச் செயல்களைச் செய்யாதீர்கள், பிற உயிர்களுக்கு தீங்கு சிறிதுகூடச் செய்யாதீர்கள் என்பதே. எல்லா மகான்கள், தீர்க்கதரிசிகள் இவர்களின் அழியா உபதேசம், எந்த ஒரு ஜீவனுக்கும் செய்யப்படும் கொடுமை, ஆண்டவனுக்குச் செய்யப்படும் கொடுமையாகும். ஏனென்ருல், ஆண்டவன் எல்லா உயிரினங்களிலும், உள் உறைகிருர். யாருக்கும் தீங்கு செய்யாமல் இருப்பதில்தான் வாழ்க்கையின் சாரமே இருக்கிறது. இந்தப் பிறவி, இந்த தேசம், இந்த வாழ்க்கை இவை அனைத்தும் பிறருக்கு சேவை செய்வதற்காகவே கிடைத்திருக்கின்றன. "பரோபகாரம் இதம் சரீரம்'' என்பதை நினைவில் கொண்டு, மீண்டும் மீண்டும் அதைப் பற்றியே சிந்தியுங்கள். எல்லா தெய்வீக சக்திகள், இயல்புகள் இவற்றின் ஒட்டு மொத்தமான உருவகமாகத் திகழும் அன்னை பராசக்தி உங்கள் உள்ளத்தில் வீற்றிருந்து மேற்கூறியபடி தெய்வீக வாழ்க்கையை நீங்கள் வாழுமாறு ஊக்குவிக்கட்டும். வெறுப்பை அன்பினுலும், தீமையை நன்மையினுலும், பொய்மையை சக்தி வாய்ந்த சத்தியத்தினுலும் அடக்க நீங்கள் அனைவரும் ஒன்றுபட்டுச் செயலாற்றுங்கள். தன்னலத்தையும், சுரண்டலையும் ஜெயமளிக்கும் தன்னலமற்ற தன்மை, சதாசாரம் இவற்றினுல் வெற்றிகொள்ளுங்கள். ''ஆண்டவனே! அசத்திலிருந்து சத்திற்கும், இருளிலிருந்து ஒளிக்கும், அழிவிலிருந்து அமரத்துவத்திற்கும் எங்களை வழி நடத்திச் செல்லுங்கள்'' என்று மனமாரப் பிரார்த்தனை செய்யுங்கள்.

ஓம் சாந்தி! சாந்தி! சாந்தி!

## மதங்களின் அடிப்படை ஒற்றுமை

*(24—12—1950 ல் பம்பாய் வானொலி நிலையத்திலிருந்து ஒலி பரப்பப்பட்டது.)*

ஆசீர்வதிக்கப்பட்ட அமர ஆத்மனே! எல்லாம் வல்ல இறைவன் என்ற பொதுவான மேலாம் ஜோதியின் தெய்வீகப் பொறிகளாக விளங்கும் உங்கள் அனைவரையும் வணங்குகிறேன். சிருஷ்டி அனைத்திற்கும் பொதுவானதாகவும், ஆதியும், அந்தமுமாக இருக்கும், ஒளிக்கெல்லாம் பேரொளி யாகத் திகழும் அளப்பரிய பேரொளியின் கதிர்களே நீங்கள். ''மாறுபட்டவை என்று கூறப்படும் அனைத்து மதங்களின் பின்னணியில் இருக்கும் ஒருமைப்பாடு, அடிப்படை ஒற்றுமை'' என்ற மிக முக்கியமான பொருளைப்பற்றி இன்று உங்களிடம், மிக்க மகிழ்ச்சியுடன் உறையாற்ற இங்கு வந்துள் ளேன். இந்தத் தருணத்தில் இந்த விஷயத்தை நான் மிக முக்கியமானதாகக் கருதுகிறேன். ஏனெனில், மக்களைப் பதட்டமுடையவர்களாகவும், மகிழ்ச்சியற்றவர்களாகவும் செய்யக் கூடிய வகை யில், உலகெங்கும் இன்று பரவியுள்ள மேலெழுந்த வாரியான எல்லா வித்தியாசங்களையும், வேற்றுமை களையும், முறியடிக்கக் கூடிய மிகப் பயனுள்ள சக்திவாய்ந்த ஆயுதம் இந்த இன்றியமையாத ஒற்றுமையை சரியாக அறிந்து கொள்வதே என்பது எனது அசைக்க முடியாத நம்பிக்கை. ஒரு பொது வான குறிக்கோளை அடைய ஏற்பட்ட பல வழி களும், முறைகளுமே இவ்வுலகிலுள்ள பற்பல மதங்கள் என்பதைச் சிறிது சிந்தித்து, அறிந்து கொண்டாலே, இப்புவனத்திலுள்ள எல்லா உயிரினங்களுக்கு இடையே அடிப்படையில் அமைந் துள்ள ஒருமைப்பாட்டை உணர முடியும். தெய்வீக உணர்வைப் பெறுவதே இந்தப் பொது குறிக்கோள்

நீங்கள் இந்த அழியும் உடம்பு அல்ல மாறும் இயல்புடைய, வரையறைக்குட்பட்ட மனமும் இல்லை, ஆனால் நீங்கள் அனைவரும் தூய்மையான யாண்டும் சுதந்திரமான ஆன்மாதான் என்பதை அறிவதே இக்குறிக்கோள். இந்த ஆன்மா பிறப்பற்றது, அமரத்துவமுடையது, நிலையானது, புராதனமானது, என்பதை யாண்டும் நினைவில் இறுத்திக் கொள்ளவேண்டும்.

இதுதான் உங்கள் உண்மை இயல்பு. நீங்கள் ஒரு பெயருடனும், உருவத்துடனும், பிணைக்கப்பட்ட நிலையற்ற இந்த சிறிய ஆள் இல்லை. நீங்கள் ராமசாமியோ, முகர்ஜியோ, மேதாவோ, கார்டேயோ, ஆப்தேயோ அல்ல அறியாமை என்ற தாற்காலிக மேகமூட்ட இருளினால், இச்சிறிய மாயையில் எதிர்பாராமல் நீங்கள் வீழ்ந்திருக்கிறீர்கள் அவ்வளவுதான். விழித்தெழுந்து, நீங்கள் தூய்மையான ஆன்மா என்பதை உணருங்கள். ஒவ்வொரு மதமும் உங்களை இதைத்தான் உணர வைக்கின்றன. எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் ஒரு உணர்வின், உள்ளடங்கிய ஒரு பகுதியே நீங்கள் என்ற இந்த ஆன்மீக ஞானத்தைப் பெறுவதையே எல்லா மதங்களும் தங்களுடைய அடிப்படை நோக்கமாகக் கொண்டுள்ளன. ''ஈஸாவாஸ்யம் இதம் சர்வம்'' என்ற அந்த சிறப்பான பேரறிவிப்பை உங்களுக்கு நினைவூட்ட விரும்புகிறேன். எங்கும் பரமாத்மா வியாபித்திருப்பது மட்டுமல்லாமல், இருப்பதெல்லாம் அந்த பரமாத்மா ஒன்று மட்டுமே.

[புருஷயே வேதம் சர்வம்]

## பல மதங்கள் ஏன் தேவை ?

எல்லா மதங்களின் பொதுக் குறிக்கோள் இதாக இருந்தால் பின் ஏன் இத்தனை மதங்கள் இருக்க

வேண்டும்? ஆம்! குறிக்கோள் ஒன்றுதான்! ஆனால் இதை அடைய முயற்சி செய்து கொண்டிருக்கும் எண்ணற்ற மக்கள் பல்வேறு குணங்கள், வித்தியாசமான சுவைகள், அபிலாஷைகள், தகுதிகள் இவைகளை உடையவர்களாக இருப்பதினால், பண்டையக்கால அறிஞர்கள், மக்களின் ஒவ்வொரு குணத்திற்கும், சுவைக்கும், தகுதிக்கும், அழகாக ஏற்புடைய வகையில் பல்வேறு மார்க்கங்களையும், மரபுகளையும், அமைப்பதே நன்று என்று உணர்ந்தார்கள். எனவே, சரியாகப் புரிந்துகொள்பவர்களுக்கு, இந்த பலவகைப் பாதைகள், மனிதகுல சரித்திர ஏட்டில், கரும் புள்ளிகளாகத் தோன்றாமல் நம் முன்னோர்களின் அன்பு, அறிவு, இவற்றின் நிலையான சின்னங்களாகக் காட்சியளிக்கின்றன. பல்வேறு கால கட்டங்களில் இவ்வுலகில் தோன்றிய மகான்களும், தீர்க்கதரிசிகளும், மக்களின் வாழ்க்கைத் தரம், பல்வேறு நிலைகளில் இருப்பதைக் கண்டனர். இதைக் கண்டு, இச்சான்றோர்கள், காலத்திற்கேற்பவும், மக்களின் தனிப்பட்ட தேவைகளை நன்கு பூர்த்தி செய்யும் வகையிலும் பல மார்க்கங்களைத் தோற்றுவித்தார்கள். எனவே, பல்வகைப்பட்ட மதத்தினருக்கு விதிக்கப்பட்டிருக்கும், புறச் சடங்குகளில், மேலெழுந்தவாரியாக பல வகைகளையும், வித்தியாசங்களையும் நீங்கள் காண்கிறீர்கள். ஆனால் இவ்வுலக வாழ்க்கையில் உள்ள கட்டுப்பாடுகள், பழுதுகள், உபாதைகள், துன்பம், குறைகள் இவைகளைக் கடந்து, 'அமர வாழ்வு', 'அழியா ஆனந்தம்' என்ற பரம்பொருள் உணர்வை அடையவேண்டும் என்ற குறிக்கோளிலிருந்து அவை விலகியதே இல்லை. பலவகையில் குறிப்பிடப் படுகிற பூர்ண ஞானம், அளப்பரிய ஒற்றுமை உணர்வு என்ற ஒன்றே ஒன்றுதான் உள்ளது. எல்லாம் அதுவே, அதுவே எல்லாம். ''உண்மை

ஒன்றே. அறிஞர்கள் அதைப் பலவிதமாகக் கூறுகிறார்கள்'' என்ற மகத்தான கூற்றின் அழகான தாத்பரியத்தை இங்கு நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள்.

## அடிப்படை சாரங்கள் ஒன்றே

குறிக்கோள் மட்டும் ஒன்றாக இல்லாமல், மத அனுஷ்டானங்களில்கூட அடிப்படை சாரங்கள் மனிதகுலம் முழுவதும் ஒன்றாக இருப்பதை நீங்கள் அறிவீர்கள். சிறு முக்கிய மற்ற விஷயங்களின் விளக்கங்களில் பலவும் வித்தியாசமாகத் தோன்றலாம். ஆனால், செம்மையான ஒழுக்கத்தின் அடிப்படையில் தெய்வீக வாழ்க்கை என்ற மேற்கூரையைப் படிப்படியாகக் கட்டி அதன்மூலம், மனிதனின் கீழான இயல்புகளைப் புனிதப்படுத்தி ஆன்மீக ஆனந்தத்தை அடைய அவனுக்கு கற்பிக்க முயல்வதே எல்லா மதங்களின் சாரம். தூய்மைப் படுத்துதல், நன்னடத்தை, தெள்ளிய உண்மையான நடவடிக்கைகள், சிறந்த ஒழுக்கம், நற்குணங்களின் அபிவிருத்தி, ஆன்மீகச் செம்மை, இவை உலக மதங்கள் எல்லாவற்றினுடைய உயிர் மூச்சாகத் திகழ்கின்றன.

நல்வாழ்க்கை அதாவது தெய்வீக வாழ்க்கை என்ற நிலையான அடிப்படையில்தான் எல்லா மதங்களும், யாண்டும் நிலைபெற்றிருக்கின்றன. உண்மை, தூய்மை, உலகந்தழுவிய அன்பு இவை இந்த அடிப்படையை உருவாக்குகின்றன. எல்லா மதத்திற்கும் அதன் அடிப்படையே மிக முக்கியமான பகுதியாகும். ''நல்லவனாயிரு, நல்லது செய், அன்பாயிரு, தூய்மையாயிரு, எல்லா ஜீவன்களுக்கும் கருணை காட்டு, மனிதனுக்கு மனிதன் ஏற்றத்தாழ்வு

பாராதே, ஒரே ஆன்மீக அன்பு அரவணைப்பில், அனைத்தையும் ஒன்று படுத்து'' என்று எல்லா மதங்களிலும் உள்ள அடிப்படைகளும் மனிதனுக்கு போதிக்கின்றன. இந்த சேவையை எல்லோர் உள்ளத்திலும் உறைந்து, ஆட்டிவைக்கும் ஆண்டவனுக்குச் செய்யும் சேவையாகக் கருதவேண்டுமென்றும் போதிக்கின்றன. அழியக் கூடிய இவ்வுலக விஷயங்களின் மினுக்கிலும், மாயக் கவர்ச்சியிலும் ஏமாந்து போகாதீர்கள், புலன்களால் ஏமாற்றப் படாதீர்கள், ''கடவுள் காட்சியே வாழ்க்கையின் குறிக்கோள் என்பதை மறந்துவிடாதீர்கள்'' என்று அவை கற்பிக்கின்றன. மேலும் அவை மனிதன் எப்படி பணிவுடன் இருக்கவேண்டும், எப்படி நம்பிக்கையை வளர்க்க வேண்டும், இயந்திரியங்களை எப்படிக் கட்டுப்படுத்த வேண்டும், மாசு படைத்த வேட்கைகள், கோபம், பொறுமை இவைகளை எப்படி அடக்கவேண்டும், மேலான குறிக்கோள்கள், விழுமிய எண்ணங்கள், மாசற்ற ஒழுக்கம், மேலான தன்னலமற்ற சேவை, அன்பு கெழுமிய தியாகத்திற்கு எப்பொழுதும் தயார் நிலையில் இருத்தல் முதலிய அம்சங்களைக் கொண்ட தெய்வீக வாழ்க்கையை எப்படி வாழ வேண்டும் என்றும் கற்பிக்கின்றன. இப்படிப்பட்ட தெய்வீக வாழ்க்கையை வாழ்வதே, ஒவ்வொரு மதத்தின் உயிர்நாடியும், அடிப்படையுமாகும். கடந்த கால மகான்கள், தீர்க்கதரிசிகள் இவர்களின் போதனைகள், பிரசாரங்கள் இவைகளின் ஆன்மாவும் அடிப் படையும் இந்த தெய்வீக வாழ்க்கையே. பாரத தேச முனிவர்கள், முகம்மதுநபி, யேசுகிறிஸ்து, புத்தர், சொராஸ்டர், திர்த்தங்கர்கள் போன்ற பெரியோர்கள், சைதன்யர், கபீர், ராமானந்தா, ஸ்ரீ ராமகிருஷ்ணர் போன்ற மகான்கள், இவர்களின் வாழ்க்கை, செயல் இவைகள் இந்த மேலான குறிக்கோளின் விளக்கமாக

அமைகின்றன. தூய்மைப்படுத்துதல், மனித இயல்பை தெய்வீகமாக மாற்றி அமைத்தல், தெய்வீக வாழ்க்கை வாழ்தல், இவை உலக மதங்களின் பொது அடிப்படைகளாக அமைகின்றன.

ஓர் நவரத்ன மாலையிலுள்ள பல்வேறு வகைப் பட்ட ரத்தினங்களின் ஊடே செல்லும் (கோர்க்கப் பட்டுள்ள) நூல் அவைகளை ஒன்ருகப் பிணைத் திருப்பதுபோல், உலக மக்களை பிணைத்திருக்கும் கண்ணுக்குப் புலனுகாத இனிமையான பிணைப்பாக இந்த அடிப்படை விளங்குகிறது. ரத்னங்கள் தாங்கள் ஒருவருக்கொருவர் வேறுபட்டவர்கள் என்று உணரத் தலைப்பட்டால் உடனே அந்த நூல் ''அன்பர்களே! நீங்கள் அனைவரும் ஒருவரே!'' என்று இனிமையாக நினைவுபடுத்துகிறது. இந்த அழகான ஒற்றுமையை மறந்து சில நேரங்களில் சண்டையிட்டுக் கொள்வது, வித்தியாசமான நிறங்களில் ஆடை அணிந்து கொண்டிருக்கும் குழந்தைகள் தாங்கள் ஒரு தாய் மக்கள் என்பதை மறந்து தங்களுக்குள் சண்டையிட்டுக் கொள்வது போன்று மடத்தனமானது. தூய வெள்ளைத் திரைச்சீலை ஒன்றில், ஒரு காட்டாற்றின் கரையில் கொழுந்து விட்டு எரிந்து கொண்டிருக்கும் நெருப் பையச்சுற்றி யாத்திரிகர்கள் குழு ஒன்று உட்கார்ந்து கொண்டிருக்கும் அழகான மாலை நேரக்காட்சி பல வண்ணங்களில் வரையப்பட்டிருப்பதாக கற்பனை செய்து கொள்ளுங்கள். அந்தப்படத்தில் வரையப் பட்டுள்ள தண்ணீரும், நெருப்பும் தாங்கள் ஒருவருக்கு ஒருவர் விரோதி என்று எண்ணிஞல், ''இது எத்தனை அபத்தமாக இருக்கிறது'' என்று நீங்கள் நினைப்பீர்கள். ஏனென்ருல், அந்த நீரும், நெருப்பும் வண்ணக் குழம்பு செய்யும் ஒரு மாயாஜாலம் என்பது நீங்கள் அறிந்ததே. இந்த வண்ணப்படத்திற்கு அடிப்படையில் வண்ண

ஜாலங்களைத் தாங்கும் தூய்மையான, மாறுத, திடப் பொருளாகிய திரைச்சீலை இருப்பது உங்களுக்குத் தெரியும். அன்புள்ள அமர ஆத்மனே! ஒரே தெய்வீகச் சுடரின் ஒளிக்கதிர்களே! அனைத்து மனித குலத்தின் ஆன்மீக இருதயத்தில் துடித்துக் கொண்டிருக்கும் இனிமையான, மகத்தான ஒற்றுமையை உணரும் அன்பு உணர்ச்சியில் யாண்டும் இருங்கள். இந்த நடுநாயகமான உண்மையை மறந்து மேலெழுந்தவாரியாக வித்தியாசப்படும் புறச்சடங்குகள், முக்கியமற்ற சிறு பழக்க வழக்கங்கள் இவற்றில் உங்களை இழந்துவிடாதீர்கள் என்று மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். ஏனெனில் அப்படிச் செய்யும்பொழுது நீங்கள் தும்பைவிட்டு வாலைப் பிடிப்பவர்கள் ஆகிறீர்கள். இந்த ஒருமைப் பாட்டை உணர்ந்து, நிலைநாட்டி, வெளிக் கொண்டுவந்து பரப்ப நீங்கள் உறுதி எடுத்துக் கொண்டால், மனிதகுல ஒற்றுமை என்ற குறிக்கோளுக்கு நீங்கள் அருமையான உதவி செய்தவர்கள் ஆவீர்கள்.

## மத உணர்வு

மனிதனுக்குள்ள எல்லா உணர்வுகளிலும், மத உணர்வே மிகவும் சக்தி வாய்ந்தது. மற்ற எல்லா உணர்வுகளும் மனிதன் வளரும்பொழுது பெறப் படுகின்றன. ஆனால் மத உணர்வு அவனுக்குப் பிறவியிலேயே அவன் உள்ளத்தில் ஆழமாகப் பதிந்துள்ளது. பெற்றோர்களின் ஆழமான மத உணர்வுகளும் நம்பிக்கைகளும், பாரம்பரியமாக கருவாயுள்ளபோதே சிசுவின் உள்ளத்தில் புதைந்து விடுவதாக உள இயல் கூறுகிறது. எனவே மனிதனின் மத உணர்வு எவ்வளவு முக்கியமான தாகவும், பலமானதாகவும் இருக்கிறது என்பதை

நீங்கள் உணரலாம். தவறான வழியில், தவறான பிரிவினை நோக்கத்துடன் சிந்தனையற்ற அவசர புத்தியுள்ள சிலர் இந்த உணர்ச்சியை மாசுபடுத்துவது எத்தனை மாபெரும் தவறாகும்! அன்பு, ஒற்றுமை என்ற உரைக்கல்லில் இந்த மத உணர்வு தீட்டப்பட்டால், அது நம்மிடையே ஒற்றுமை, இணக்கம் என்ற மகத்தான ஆக்க சக்தியைத் தோற்றுவிக்கும். எல்லா வேற்றுமைகளையும் போக்கவும், மோதல்களைத் தவிர்க்கவும், சச்சரவுகளையும், அபிப்ராய வித்தியாசங்களையும் முடிவுக்குக் கொண்டுவரவும், இந்தச் சக்தி உடனடியாகச் செயல்படத் தொடங்கி, நாம் எல்லோரும் ஆவலுடன் பெறுவதற்கு ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கும் சமாதான இன்பம், ஒற்றுமை, அன்பான கூட்டுறவு இணக்கம், செல்வம், இவற்றை மனிதகுலத்திற்கு பெருமளவில் வழங்கும். உலக மதங்களிடையே இப்படிப்பட்ட ஒற்றுமையினால் ஏற்படும் ஒருங்கிணைந்த கூட்டுறவினால், இணக்கமான அமைதி நல்லெண்ணம், இவற்றுடன் கூடிய எதிர்காலத்தை நிர்மாணிக்கும் பணி நன்றே நிறைவேற்றப்பட முடியும்.

எல்லா மதங்களும் ஒன்று என்ற ஞானத்தின் அடிப்படையை எப்பொழுதும் நம்பி அதன்வழி நீங்கள் அனைவரும் நடக்கவேண்டும். எல்லா அடிப்படைகளும் ஒன்றே. எல்லா மதங்களிலும், நம்பிக்கைகளிலும், அடிப்படையில் முழு ஒற்றுமை இருக்கிறது. ஏனென்றால் அவை மனிதனுக்கு நேர்மை, பொறுமை, மன்னிப்பு, அஹிம்சை, இரக்கம், கொடை, தெய்வீக அவா இவைகளைக் கொண்ட வாழ்வைக் கடைப்பிடிக்க வேண்டும் என போதிக்கின்றன. மாபெரும் மத கிரந்தங்களான, பைபிள், குரான், செண்டவஸ்தா, கீதை போன்றவற்றை நம்பிக்கையுடன் படியுங்கள். அனைவரின்

தோற்றத்திற்கும் பொதுக்காரணகர்த்தாவான பரம்பொருள் ஒன்றே. அதை யாண்டும் நினைவில் இருத்திக் கொள்ளுங்கள். யாண்டும் அந்த திவ்ய நாமத்தைக் கூறுங்கள். அவன் புகழ் பாடுங்கள். கர்வம், அகந்தை இவற்றைப் போக்கவும், இனிமை, பணிவு, சேவை மனப்பான்மை இவற்றை வளர்த்துக் கொள்ளவும் முயற்சி செய்யுங்கள். தாராள மனப்பான்மையுள்ளவராயிருங்கள். இரக்கமுள்ளவராயிருங்கள். தன்னலம், பேராசை, இவற்றை உள்ளத்திலிருந்து அறவே ஒழியுங்கள். புலனடக்கம், சேவை, பக்தி, ஆன்மீகம், தியானம் முதலிய நற்பண்புகள் அடங்கிய வாழ்க்கையை வாழுங்கள். தன்னை உணர முயற்சி செய்யுங்கள். அமைதியையும், ஆனந்தத்தையும் அடையுங்கள். அவற்றை பிரதிபலியுங்கள். உலகில் அமைதி, ஆனந்தம் இவை நிலவ உதவுங்கள்.

இதைச் செய்தால், இந்த ஒற்றுமையை அசைக்கவோ, அமைதியைக் குலைக்கவோ, பிரிவினை, வித்தியாசம் முதலிய எந்த வெளி விஷயத்திற்கும் சக்தியில்லை. ஒற்றுமையே தெய்வீகம். மேலெழுந்தவாரியாக உள்ள எல்லா பேதங்களையும், வித்தியாசங்களையும் அன்பின்மூலம் அடக்கி வெற்றி கொள்ளுங்கள். நாமம் ரூபம் என்ற சிறிய திரைக்குப்பின்னால் பார்வையைச் செலுத்தி, எங்கும் நிறைந்து எல்லாவற்றிலும் இன்றியமையாததாக இருந்து, எல்லாவற்றிற்கும் மூலமாகவும் இயங்கும், ஒரே கடவுளை எங்கும் காணும் ஆன்மீக அன்புப் பார்வையை ஆண்டவன் உங்களுக்கு அருளட்டும். அமரத்துவமான, சாட்சியாக விளங்கும் இரண்டற்ற ஒரே பரமாத்மா எல்லா உயிரினங்களுக்குள்ளும் மறைந்துள்ளது என்பதை நீங்கள் அனைவரும் உணர்வீர்களாக.

# மதத்தின் உலகம் தழுவிய பாங்கு

(டெல்லி ரேடியோ நிலையத்திலிருந்து
13—11—1950 அன்று ஒலிபரப்பப்பட்டது)

ஓம். ஒருமைப்பாட்டின் ஆனந்தமும், நல்லெண்ணத்தின் சாந்தியும் உங்கள் அனைவருக்கும் உளதாகுக. மென்மையானவை கடினமான திடப் பொருட்களின் உள் புதைந்து இருக்கின்றன என்பதே இந்த அதிசய உலகத்தின் பொது விதி. ஒரு பொருளின் உண்மையையும், உட்பொருளையும், அதன் புறத்தோற்றம் மறைக்கிறது. பெயரிலும், உருவத்திலும் தத்துவம் மறைந்திருக்கிறது. உள்ளுறையும் உண்மையையும், அடிப்படை சாரத்தையும், காண்பதற்கு நீங்கள் விருப்பு வெறுப்பற்ற விசாரணை, பகுத்தறிவு இவற்றின் துணை கொண்டு ஆராயவேண்டும் இப்படிச் செய்யத் தவறினால் உங்களுக்கு மேலெழுந்த வாரியான தோற்றமே கிடைக்கும். அதனால் சத்தைக் காணாமல், சக்கையைத்தான் காண்பீர்கள். மதமும், இந்த விதிக்கு விலக்கல்ல. மேற் சொன்ன காரணங்களினால்தான் மிகப் பலரால் மதத்தின் உண்மையான முக்கியத்துவம் சரியாகப் புரிந்து கொள்ளப்படுவதில்லை. மதத்தின் உண்மையான தத்துவத்தைப் பற்றிய ஆத்மார்த்தமான ஆராய்ச்சி அங்கு இல்லை என்பது தெள்ளத் தெளிவாகிறது. எனவே, மிகச்சிறந்த பொதுத் தத்துவமாகவும், உலகனைத்தையும் ஒற்றுமைப்படுத்தும் சக்தியாகவும், மதம் திகழ்கின்றது என்று சரியாகப் புரிந்து கொள்ளப்படுவதற்கு மாறாக பல சண்டைகள், சச்சரவுகள், ஏன் யுத்தங்களுக்குக்கூட காரணமான ஒரு பிரிவினை சக்தி அது என்று தவறுதலாகப் புரிந்துகொள்ளப்படுகிறது. இந்தத் தவறான அபிப்ராயத்திற்கு ஆதாரமாக பழங்கால, தற்கால

சரித்திரங்களைப் பலர் உடனடியாக மேற்கோளாகக் காட்டுகிறார்கள். ''உலகம் தழுவிய பாங்கு'' என்ற அடைமொழியை மதத்திற்குக் கொடுப்பதே பலரிடம் சந்தேகப் புன்னகையைத் தோற்றுவிக்க லாம். ஏனென்றால், தீபாவளி அலங்கார விளக்கின் பலநிறக் கண்ணாடிகள் மூலம் வெளிவரும் ஒளியைக் கண்டவர்கள், விளக்கொளியின் உண்மையான வெண்நிறத்தைக் காணாமல், புறத்தேயுள்ள பல நிறக் கண்ணாடிகள் மூலம் வரும் பல நிறங்கள்தான் உண்மை விளக்கொளியின் தன்மை என்று கொள்வார்களேயானால், அவர்கள் எந்தத் தவற்றைச் செய்கிறார்களோ, அதே தவற்றைத் தான் இந்த சந்தேக வாதிகளும் செய்கிறார்கள். அதனால் அவர்களைப் பார்த்து நான் நகைக்கிறேன்.

## உண்மையான மதம்

உலகந்தழுவிய பாங்கு உண்மையான மதத்தின் மிகச் சிறந்த கோட்பாடாகும். பகுத்தறிவு இல்லாத மனிதனின் அபிப்ராயமோ, ஒப்புதலோ, இந்த நிலையை மாற்றப்போவதில்லை. உண்மையான மதம் என்று நான் கூறும் பொழுது, மதத்தின் தூய்மையான அடிப்படைகளைக் குறிப்பிடுகிறேனே ஒழிய, அதனுடைய மரபுக் கட்டுப்பாடுகளை அல்ல. மதச்சடங்குகளிலோ, புறச்சின்னங்களிலோ, மரபு வழி விரதங்களிலோ, அம்மதத்தைக் கடைப்பிடிப் பவர்களின் உடை அணியும் விதத்திலோ, சமுதாயப் பழக்க வழக்கங்களிலோ, மதத்தின் உலகந்தழுவிய பாங்கு இல்லை. இவையாண்டும் மாறக் கூடிய மேலெழுந்தவாரியான தோற்றங்களே. ஆனால் சிறிது சிந்தனையும் ஆராய்ச்சியும் செய்தால், ஒவ் வொரு மனிதனின் இதயத்தில் உள்ள மூல உந்து தலே மதம் என்ற ஐயம் திரிபு அற்ற உண்மையை அறிந்து கொள்ளலாம். மனித குலம் முழுமைக்கும்

பொதுவானது மத உணர்வு ஒன்று. ஏனென்றால் நீங்கள் மனிதராக இருக்கிறீர்கள் என்ற உண்மையிலிருந்தே மத உணர்ச்சி அல்லது மத உணர்வு எழுகிறது. மனிதனிடம் இருக்கும் அமரத்துவ மூலத்தினுடைய ''தன்னை அறிய வேண்டும்'' என்ற தலையாய ஆன்மீக உந்துதல்தான் மதத்தின் அஸ்திவாரமாக அமைகிறது. இந்தத் தத்துவம் ஒவ்வொருவர் இதயத்திலும் துடித்துக் கொண்டிருக்கிறது. எல்லா உயிரினங்களுக்கும் தொடக்கமும் தோற்றமுமாகிய அளப்பரிய ஒரே பொருளை நோக்கிச் செல்ல வேண்டும். இந்த அடிப்படை உலகந் தழுவிய உந்துதலே, விரிவாக்கச் செய்யப்படும், சிற்சில வேறுபாடுகளுடன் கூடிய செயல் முறைகள் தான் இன்று இருப்பனவும், முற்காலத்தில் இருந்தனவுமாகிய மதங்களும், நம்பிக்கைகளும் ஆகும். எனவே இது, மனித உணர்வின் ஒரு அடிப்படைப் பகுதியாக அமைகிறது. பால் உணர்வு, வயது, ஜாதி, பெற்றோர் பிள்ளைகள் தொடர்பு, மரபுவழி, பதவி, செல்வாக்கு, மதப்பிரிவு அல்லது, அரசியல் கட்சி இவை போன்ற மனித உணர்வுகளெல்லாம், ஒருவன் வளர்ந்து பெரியவன் ஆனபிறகு அவனால் அவன் வாழ்க்கையில் பெறப்படுவன. இவை, அவனுக்குப் புறம்பான விஷயங்களைப் பொறுத்து அமைகின்றன. விஷயங்கள் மாறும்பொழுது இவையும் மாறுகின்றன. தனிப்பட்ட நபர், வாழ்க்கையைப் பற்றிய தனது அபிப்ராயத்தையோ, தனது தத்துவத்தையோ, வாழ்க்கை முறையையோ, தன் சிந்தனைகளையோ, மாற்றிக்கொள்ளும்பொழுது இந்த உணர்வுகளும் மாறுகின்றன. ஒரு இந்து வாலிபன், ஒரு கிருஸ்துவப் பெண்ணைக் காதலித்து கல்யாணம் செய்து கொள்கிறான். அவன் ஒரு கிருஸ்துவன்போன்று நடக்கவும் வாழவும் ஆரம்பிக்கிறான். ஒரு இந்தோனேஷியப் பெண் ஒரு இந்துவை

மணந்து முழுமையான இந்துப் பெண்ணைகத் தன்னை உணர்கிருள். அமெரிக்க நாட்டில் தங்கியுள்ள ஒரு ஜப்பானியப் பேராசிரியர், அமெரிக்க பிரஜையாகிருர். சில வருடங்களுக்குப் பிறகு அவருடைய முந்திய அரசியல் உணர்வுகளெல்லாம், அவருக்கு மறைந்தொழிந்து விடுகின்றன. கௌன்ட் லியோ டால்ஸ்டாய் (Count Leo Tolstoy) என்ற பெரிய கனவான் தன்னை முழுமையான விவசாயியாக மாற்றிக்கொண்டார். இவ்வுலகிலிருந்து, காலப்போக்கில் பெறப்பட்ட இந்த வெளிப் போர்வைகளை (உபாதிகள் என்று சம்ஸ்கிருதத்தில் இவை கூறப்படுகின்றன) எவ்வளவு சுலபமாக மனிதன் உதறித்தள்ளி விடுகிருன் என்பதைக் காண்கிருேம். ஆனல் உங்களுடைய ஆன்மீக உணர்வை உங்களால் உதறித்தள்ள முடியாது. ஏனென்றல் இந்த விஷயம், உங்களுடைய உள்ளுறையும் இயற்கையினுடைய இயல்பின் ஆழத்திலிருந்து வெளிப்படுகிறது. இந்த ஆன்மீக உணர்வை எழுப்பி, வெளிக்கொண்டுவரும் வழிமுறைதான் உண்மையான மதம். மனித சரித்திரத்தின் பல்வேறு கட்டங்களில், தெய்வீக எழுச்சி பெற்றவர்களும், தீர்க்கதரிசிகளும், ஜகத்குருக்களும் தோன்றி இந்த அந்தர்முக எழுச்சியையும், சாதனையையும், அந்தந்தக் கால மக்களின் தேவைகளுக்கு ஏற்றவகையில் அளித்தார்கள். ஆனல் குறிக்கோள்களும், உட் செய்முறைகளும், எல்லாக் காலங்களிலும், எல்லா இடங்களிலும், மனித குலம் முழுமைக்கும், ஒன்றுகவே இருந்திருக்கின்றன, இருக்கின்றன, யாண்டும் இருக்கவும் செய்யும்.

## மதம் என்பதின் பொருள் என்ன?

ஆன்மா மனிதனின் தெய்வீகத் தன்மை. இந்த ஆன்மா சத், சித் ஆனந்தமயமானது. அது நிலை

யான சாந்தியாகும். ஆத்மா சாந்தி மயம். சாந்தி, சிவம், சுபம், சுந்தரம், அத்வைதம் இவைகள் ஆன்மீக அனுபவத்தின் தன்மைகள். எனவே இவைகளை வெளிக்கொணர்வதே உண்மையான மதத்தின் அடிப்படை சாரம். மனித குணத்தில் உள்ள தீயனவற்றை விலக்கி, விழுமிய கருத்துக்கள், நன்மைகள், மங்களங்கள், அழகுகள் எல்லாவற்றையும், அவனுள் தோற்றுவிப்பதும் மதத்தின் வேலை. முழுமையான அற வாழ்க்கையை முதன் முதலில் சாதனைகளைக் கடைபிடிக்கச் செய்வதின் மூலம் இதைச் செய்கிறது. எல்லா மதங்களும் அறவாழ்க்கையின் அடிப்படையில் அமைந்தவை தான். ஒழுக்க நேர்மையும், முழுமையான நல்லறமும், இதுவரை தோன்றியுள்ள ஒவ்வொரு மதத்திற்கும் பொதுவான அடிப்படைகளாகும். ''நல்லவனாக இரு. நல்லதே செய், அன்பாயிரு, தூய்மையாயிரு, இரக்கமுடையவனாயிரு. சகிப்புத் தன்மை உள்ளவனாக இரு. சேவை, அன்பு, கொடை என்பனவெல்லாம், அடிப்படைக் கோட்பாடுகள். இதன்மூலம், மதம் நடைமுறையில் ஏறும் ஆரம்பப் படிகளிலேயே, அதனுடைய உலகந்தழுவிய தன்மையின் ஒரு முக்கியமான கோணம் காணப்படுகிறது. அபு பென் ஆதம் பற்றிய அழகான சிறு கதையும், ராண்டி தேவாவின் உணர்ச்சிமிக்க கதையும், நல்ல சமரியன் பற்றிய பைபிளின் கூற்றும், கௌதம புத்தரின் விழுமிய விரிவுரைகளும், பிம்பிசார அரசனின் தியாகமும், இவைகளெல்லாம், உண்மையான அடிப்படை மத உணர்வுகளை அழகாகவும், பயனுள்ள வகையிலும், வெளிப்படுத்துகின்றன. தூய்மை, பரிவு, உலகம் தழுவிய அன்பு, சகிப்புத்தன்மை, பணிவு, கோபமின்மை, சகோதரத்துவம், தன்னல மறுப்பு, தன்னலமற்ற சேவை, தியாகம் முதலிய தெய்வீக இயல்புகளை நடைமுறையில் பெறவேண்டும் என்று

தவருது வலியுறுத்துதல், மத வாழ்க்கையின் நடைமுறையில் உலகம் தழுவிய தன்மையின் மற்ருெரு அழகான பொன் இணைப்பாகும். இச்சைகள், புலனின்பங்கள், இவற்ருல் விளையும் மிருக இயல்புகளை வெற்றி கொள்ளல், புலனடக்கம், பேராசை, பிறர் பொருள் வேட்டல், பாசங்கள், ஆசைகள், பெருமை, அகங்காரம் இவற்றைத் துறத்தல் இவை எல்லாம் நடைமுறை மதத்தின் இன்றிமையாத பாகமாக அமைவது, எல்லா உண்மை மத வாழ்க்கையிலும், உள்ள உலகம் தழுவிய தன்மையின் மேலும் சில அம்சங்களாக அமைகின்றன.

## மதத்தின் குறிக்கோள் என்ன?

எல்லா சிருஷ்டிகளின் ஒற்றுமையும், எல்லா உயிரினங்களிலும் உள்ளுறைந்து, எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் 'ஆன்மீக சாரத்தின்' காட்சியையும் உணருமாறு உண்மையான மதம் மனிதனை எழுச்சியுறச் செய்கிறது. தன்னை அறிந்து கொள்வதிஞல் ஏற்படும் உயர்ந்த நிறைவு, உயர்ந்த ஞானம், உயர்ந்த ஆனந்தம், இவையே வாழ்க்கையின் பொருள். ஞானம் பெறவேண்டும், குறைவற்ற ஆனந்தம் வேண்டும், நிலையான சாந்தி வேண்டும் என்று ஏங்குவது ஒவ்வொரு மனிதனின் இயல்பாகும். மேற்கூறிய நிலையை அடைவதற்குத் தெரிந்தோ, தெரியாமலோ நடைபெறும் முடிவில்லாப் போராட்டம், மனித வாழ்க்கையின் பிரிக்க முடியாத ஒரு பகுதியாகும். இந்த சாதனையிஞல் ஏற்படும் ஆனந்தத்தை அளிப்பதே மதத்தின் தலையாய பணியாகும். எனவே, மனித இனத்தவர் எல்லோருடைய இதயத்திலும் துடித்துக்கொண்டிருக்கும் மூலவேட்கை மதம் என்ற உண்மையிலும், மனித வாழ்க்கையே இந்த வேட்கையின் செயல் உருவம் என்பதிலும் மதத்தின் உலகந்தழுவிய

தன்மை நிறுவப்படுகிறது. உலக மதங்களின் அடிப்படைகளின் தொகுப்பு, ஆனந்த மயமான ஒருமைப்பாட்டிற்கு சுலபமான வழியைக் காட்டுகிறது. அதோடு, இகத்திலும் பரத்திலும் சாந்தி, சகோதரத்துவம், ''புவனமெல்லாம் பிரம்ம மயம்'' என்ற உணர்வு இவற்றிற்கு வழியைக் காட்டுவதால் மதத்தின் உலகந்தழுவிய தன்மை மேலும் பெறப்படுகிறது. ''ஈசாவாஸ்யம் இதம் சர்வம்'' ''சர்வம் பிரம்ம மயம்'' என்பன இந்த அனுபவத்தை விளக்கும் அருள் வாக்குகளே! எனவே மத உணர்வு எல்லா மனிதர்களேயும் உறவினர்கள் ஆக்குகிறது. ஆன்மீக ஒற்றுமை என்ற அன்பான அரவணைப்பில் மனித குலம் அத்தனையையும், மதம் கட்டி அணைக்கிறது. இப்படிப்பட்ட ஒருமைப்பாடு மட்டுமே, பிரதானமாகவும், பயனுள்ளதாகவும், நிலைத்திருப்பதாகவும் இருக்க முடியும். ஏனென்றால் மதத்தின் மூலம், ஆழமாக நிலைத்துள்ள, ஆன்மீகத்தின் அடிப்படையைக் கொண்டு மனிதனேடு மனிதன் பிணைக்கப்படுகிருன். ஒரு மாலையில் உள்ள பல்வகை நிறங்களுடைய மணிகளின் ஊடே ஊடுருவிச் செல்லும் நூல்போல், மனிதகுலம் முழுமையிலும் இந்த உணர்வு ஊடுருவியுள்ளது. இந்த அடிப்படை உண்மையை முழுமையாக புரிந்து கொண்டு நீங்கள் விழிப்புடன் இருந்தால், மனிதனின் மேலெழுந்தவாரியான, பகுதியாயிருக்கும் சச்சரவிற்கும், வித்தியாசத்திற்கும், இந்த இனிமையான ஆன்மீக ஒருமைப்பாட்டை மாசுபடுத்தும் சக்தி கிடையாது. மதத்தை இப்படி உண்மையான அடிப்படையில் புரிந்து கொள்ளும் பொழுது, கிருஸ்தவர், முஸ்லீம், இந்து, புத்த மதத்தினர், ஜைனர்கள், பார்சிகள் முதலியவர்கள் தங்களைப் பல்வேறு மதத்தைச் சேர்ந்தவர்களாகக் காணுமல், முழுமை, ஆனந்தம் இவைகளைச் சென்றடையும் பாதையில், இணக்க

மாகப் பயணம் செய்யும் சகோதர ஆன்மாக்களாக உணர்வார்கள். அவர்கள் தங்களுடைய அந்தர்முக சாதனையின் வேட்கைகளும், ஆன்மீகக் குறிக் கோளும் ஒன்றே என்பதை உணர்வார்கள். மதத் தைப்பற்றிய சரியான கண்ணோட்டம், தங்களின் வேட்கை, முயற்சி, இறுதியான சாதனை இவைகள் முற்றிலும் ஒன்றே என்று மனிதகுலம் முழுமை யும் உணரும்படிச் செய்து, அதன் மூலம், மதத்தை, ஒற்றுமையை ஏற்படுத்தும் ஒரு சக்தி வாய்ந்த நிச்சயமான ஆயுதமாக உருவாக்குகிறது.

ஆசீர்வதிக்கப்பட்ட ஆத்மனே ! எனவே மதத் தின் உண்மையான முக்கியத்துவத்தை அறிந்து கொள்ளுங்கள். சரியான கோணத்தில் மதத்தை அறிந்து கொள்ளுங்கள். தனிப்பட்ட விருப்பு வெறுப்புக்கள், மரபு வழி சக்திகள், வெறியர்கள், பிடிவாதக்காரர்கள் இவர்களின் அபிப்ராயங்கள், இவை உங்கள் பார்வையை மங்கச்செய்து, மதத் தைப்பற்றி குறுகலான, நோக்கத்தை ஏற்படுத் தாமல் இருக்கட்டும். எனவே சிருஷ்டிக்கெல்லாம் ஒரே பொதுத் தொடக்கமும் தோற்றமுமாகியுள்ள வஸ்துவுடன் உங்களை இணைக்கும் இந்த அன்பு மதத்தைத் தழுவுங்கள். எல்லா மனிதர்களுக்கும் மதம் ஒன்றே! அது எங்கும், எப்பொழுதும் ஒன்றே உங்களுக்கு சாந்தியும், ஒருமைப்பாடும், ஆனந்தமும் கிடைக்கட்டும். பரமாத்மாவாகிய ஒரே கடவுள் நம்மை மாயையிலிருந்து உண்மைக்கும், இருட்டி லிருந்து ஒளிக்கும், அழிவிலிருந்து அமரத் துவத்திற்கும் வழி நடத்திச் செல்லட்டும்.

ஓம் சாந்தி ! சாந்தி ! சாந்தி !

## 7. இலங்கை மக்களுக்கு அருளிய அருளுரை :-

*[1950 அக்டோபர் 12-ந் தேதி சிலோன் ரேடியோ நிலையம் ஒலிபரப்பிய சுவாமி சிவானந்தரின் அருளுரை.]*

*அமரத்தன்மையுடைய போற்றத்தக்க மக்களே!*

*ஓம் என்ற மந்திரத்தை இப்போது ஜெபிப்போம்.*

*ஓம்! ஓம்!! ஓம்!!!*

ஓம் என்ற மந்திரத்தின் சிறப்பை உணர்ந்து, அதன் பொருளைத் தெளிந்து தியானம் செய்வீர்களானால், அதை உச்சரிப்பதால் ஆன்மீகத் தெளிவைப்பெற உங்களுக்கு உதவும். பாவத்துடனும், உணர்வுடனும் 'ஓம்' என்று சொல்லும் போது அழிவற்றதும், அமரநிலை பெற்றதுமான ஆன்மாவிடமே திரும்பிச் செல்கிறீர்கள்.

எல்லா மதங்களின் அடிப்படைகள் எல்லாம் ஒரே மாதிரியானவைதான். புத்தமதத்தின் எண் வகை மார்க்கங்கள், இந்து மதத்தில் கூறப்படும் சதாசாரம் அல்லது நல்லொழுக்கம் அல்லது இயம நியமங்கள், பதஞ்சலியின் இராஜயோகம், இயேசு கிறிஸ்துவின் மலைப் பிரசங்கம் ஆகிய எல்லாம் ஒன்றுதான். ஆன்மீக ஒழுக்கத்தில் நிறைவு பெற்று இறையுணர்வைப் பெறுவதற்கு உங்களுக்கு அவை வழிகாட்டுகின்றன.

மதம் என்பது ஒரு பொழுதுபோக்குச் சங்கத்தில் விவாதிக்கப்படக்கூடிய விஷயமல்ல. மதம் என்பது நடைமுறையில் அனுசரிக்கப்பட

வேண்டிய ஒன்றாகும். அது உங்களுடைய எலும்பு களிலும், உயிரணுக்களிலும் நுழைந்து உடல் முழு வதும் பரவி இருக்கவேண்டும். உங்களுடைய வாழ்வில் ஒவ்வொரு கண நேரத்திலும் அதன் தொடர்பு இருக்க வேண்டும். நல்லொழுக்கம், தூய வாழ்க்கை ஆகியவைகளை நீங்கள் மேற்கொள்ள வேண்டும். எல்லோரையும் நேசிக்க வேண்டும். எல்லோருக்கும் தொண்டு செய்து அவர்களிடம் பரிவுடன் நடந்து கொள்ள வேண்டும். மற்றவர் களின் உணர்ச்சிகளைப் புண்படுத்தக் கூடாது. ''உண்மையைக் கடைப்பிடி. எல்லோரிடமும் அன்பு காட்டு. எல்லா உருவங்களிலும், பெயர்களி லும் பொதுவான ஒரே ஆன்மாதான் இருக்கின்றது. உன்னைப்போல் மற்றவர்களை நேசி. இதனால் அத்வைதத் தெளிவைப் பெற்று, உன் உள்ளம் விரிவடையும்,'' என்று எல்லா மதங்களிலும் கூறப் பட்டுள்ளன. முக்கியமல்லாத விஷயங்களில் தான் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஆனால் பொதுவாகவுள்ள சிறந்த கோட்பாடுகள் உங்களை நன்கு பண்படுத்தி, மனிதத்தன்மைக்கும் மேற்பட்ட இயல்பை அடையச் செய்து பொதுவான ஆன்மீகத் தெளிவை உண்டாக்கும்.

மதத்தின் உண்மையான சாரத்தை உணராத அற்ப குணம் படைத்த சில மனிதர்கள் தாம் சச்சர விட்டுக் கொள்கிறார்கள். எந்த மதமும் வேறெந்த மதத்தையும் விட உயர்ந்ததல்ல. எல்லா மதங் களும் உங்களை வாழ்க்கையின் முடிவு அல்லது இலட்சியமாகிய சத்-சித்-ஆனந்தப்பரம் பொருளிடம்தான் அழைத்துச் செல்கின்றன. உங்களுக்கு விடுதலையும், நிறைந்த தன்மையும், வற்றாத பேரின்பமும் அளிக்கின்றன. அன்றாட வாழ்க்கையில் மதத்தோடு தொடர்பு இருக்க வேண்டும். எல்லோரிடமும் அன்பு செலுத்த

வேண்டும். ராகத்வேஷங்கள், விருப்பு, வெறுப்புக்கள் ஆகியவை உலகியல் வாழ்க்கையிலும் ஆன்மீக வாழ்க்கையிலும் தடைகளாக விளங்குமாகையால் அவைகளை அழித்துவிடவேண்டும். விருப்பு வெறுப்புக்கள் உலகில் ஒளிபரப்பும் விளக்குத் தூண்களல்ல. உண்மையில் உலகில் ராகத்வேஷங்கள் நிறைந்து. காணப்படுகின்றன.

## மனத்தை அழித்து விடு

ராகத்வேஷங்கள் நால்வகை உருவங்களில் காணப்படுகின்றன. உலகியல் மனிதன் ஒருவனிடம் இது அதிகமாகக் காணப்படுகிறது. நீ யாருடனுவது சண்டையிட்டுக்கொண்டு இருக்கலாம்; ஆனுல் உன் குழந்தை அப்போது ஓடி வந்து உன்னை முத்தமிடுகிறது; அதனுல் வெறுப்பு மறைந்து விடுகிறது. இயமம் - நியமம், தியானம், மந்த்ர உச்சாடனம், ஆன்மாவின் தன்மையைப் பற்றிச் சிந்தித்தல் ஆகியவைகளைப்பயிலும் ஒருவரிடம் இவைகள் நூலிழை போல் மெல்லியதாகக் காணப்படும். அதற்கு 'தனுஅவஸ்தை' எனப்படும். ஆனுல் நிறைவு பெற்ற யோகி அல்லது ஞானி ஒருவரிடம் அது முற்றும் எரிந்தநிலை அல்லது 'தக்த அவஸ்தை' நிலையில் இருக்கிறது. மனதையும் சங்கல்பங்களையும் அழித்து விடுவாயானுல், உன் அகந்தையைப் போக்கி விடுவாயானுல், மனம் அழிந்து உலகமே மறைந்து விடுகிறது.

ஆழ்ந்த உறக்கத்தில் மனம் வேலை செய்வதில்லை. எனவே உலகத்தைப் பற்றிய எண்ணமே இல்லை. ஆனுல் பக்தியோகம், வேதாந்தம் ஆகியவற்றின் மூலம் மனதை அழித்து விடுவாயானுல் உனக்கு உலகத்தைப் பற்றிய சிந்தனையே இருக்காது. பெயர்களும் உருவங்களும் மறைந்து எல்லாம்

இறைமயமாக அல்லது சச்சிதானந்தமயமாகவே காணப்படும். எனவே எல்லோரையும் நேசி. எல்லோருக்கும் தொண்டு செய். எல்லோருடனும் கருணையுடன் நடந்துகொள். இந்த அற்பமான தன்னலமும் கர்வமும் நிறைந்த மனதை அழித்து விடு. உனக்கும் இறைவனுக்குமிடையே தடையாக இருக்கும் இந்த அகந்தையுற்ற மனதைத் தூய்மை யான பிரித்தறியும் தன்மையால் அழித்துவிடு. பிரார்த்தனை, சாதனை, தியானம், ஆன்மாவின் இயல்பினைப்பற்றிய ஆராய்ச்சி ஆகியவற்றின் மூலம் மனத்தை அழிக்க வேண்டும்.

இந்த உடல் தூய ஆன்மா அல்ல. அது பஞ்ச பூதங்களால் ஆனது. அது இறுதியில் பஞ்சபூதங் களாக மாறிவிடும். பிராணன் என்பது ராஜஸ, தாமஸ குணங்களால் ஆனது. அதுவும் அழிந்து போகும். மனமும், அறிவும் அத்தன்மையதுதான். ஆனந்தமய கோசமும் அவ்வாறு அழியக் கூடியது தான். ஐந்து உறைகளுக்கும், மூன்று குணங் களுக்கும் அப்பால் உள்ளுறையும் ஆன்மா இருக் கிறது. ''ஏகோ தேவ : சர்வ பூதேஷு குடா : சர்வ வியாபி சர்வ பூதாந்தராத்மா கர்மாத்யட்ச சர்வ பூதாதிவாச சாக்ஷிசேத கேவலோ நிர் குணஸ்ச்ய'' அவன்தான் உன்னுடைய அறிவு, மனத்தின் மனம், பிராணனின் பிராணன், சாக்ஷி யின் சாக்ஷி (கண்களின் கண்) மனம் அங்கே செல்வ தில்லை. ஆனால் அதற்குரிய ஆற்றல் உனக்குள்ளே தூய சத்தாக விளங்கும் ஆன்மாவிடமிருந்து கிடைக்கிறது. கண்களும் காதுகளும் கூட அங்கே செல்ல முடியாது. மனத்திற்கும் புத்திக்கும் சாட்சியாக விளங்கும் சத்தான ஆன்மாவிடமிருந்து தான் தங்கள் ஆற்றல்களைப் பெறுகின்றன. சாதனை மூலமும், தியானத்தின் வாயிலாகவும் இந்த ஆன் மாவை அடைய வேண்டும். அதன் பிறகுதான்

மனதுக்கு நிரந்தர அமைதி ஏற்பட்டு, அது முடிவில்லாத பேரின்பத்தையும் அமரநிலையையும் அடையும்.

கட்டுப்பாடு மிகவும் தேவையான ஒன்றாகும். மனக்கட்டுப்பாடு, தியானம், சமூகத் தொண்டு ஆகியவை உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி, அதனிடமுள்ள குறைகளைப் போக்கி தெய்வீக ஒளியைப் பெறுதற்கு அதைத் தகுதியுடையதாகச் செய்யும். தன்னலமற்ற தொண்டு மிகவும் தேவை. அதனால் மனம் தூய்மை பெற்று அதில் தெய்வீக ஒளி சுடர் விட்டுப் பிரகாசிக்கும். அதன் பின்னர் இறையுணர்வைப் பெறமுடியும். உணவைத் தெரிந்தெடுத்து உண்பதில் கவனமாக இருக்கவேண்டும். மனத்தை அடக்குவதில் உணவிற்கு முக்கியமான பங்கு இருக்கிறது. உணவின் சத்தான அல்லது நுண்ணிய பகுதியிலிருந்து மனம் உருவாகிறது. சத்தில்லாத பகுதி கழிவுப் பொருளாக வெளியேறுகிறது. இவைகளுக்கு இடையேயுள்ள பகுதி உடம்பிலுள்ள தசையாக மாறுகிறது. விஞ்ஞானிகள் எவரும் இந்த உண்மையைக் கண்டுபிடிக்கவில்லை. தண்ணீரிலுள்ள நுண்ணிய பகுதி பிராணனாக மாறுகிறது. சத்தற்ற பகுதி சிறுநீராக வெளியேறுகிறது. இடையிலுள்ள பகுதி உடம்பில் இரத்தமாக மாறுகிறது. நெருப்பிலும் இவ்வாறே விளைவுகள் ஏற்படுகின்றன. தீயின் நுண்ணிய பகுதி பேச்சாகவும், சத்தற்ற பகுதி எலும்பாகவும், இடைப் பகுதி எலும்புக்குள்ளேயுள்ள சத்துப் பொருளாகவும் மாறுகிறது. உணவு, நீர், தீ ஆகியவைகள் இந்த மாதிரி மாற்றம் பெறுவதை எந்த விஞ்ஞானியும் ஆராய்ந்தறியவில்லை. இது உபநிடதங்களை இயற்றிய ஞானிகளாகிய ரிஷிகளால் ஆராய்ந்து கூறப்பட்டவை.

## சாதனையில் ஒழுங்குடனிரு

உணவைக் கட்டுப்படுத்து. சிறிதளவே உண்ணு. தூக்கத்தை ஒழுங்குபடுத்து. அதிக நேரம் தூங்காதே. கீர்த்தனம், தியானம் ஆகியவற்றில் ஒழுங்குடனிரு. ஒழுங்குதான் மிகவும் இன்றியமையாதது. சிலர் சில காலம் தியானத்தில் ஈடுபட்டு பின்னர் பயிற்சியைக் கைவிட்டுவிடுகிறார்கள். உலகியல் லாபங்கள் ஏதேனும் கிடைக்கும் என்று எதிர்பார்க்கிறார்கள். ''எனக்குப் பதவி உயர்வு கிட்டும்; நான் பணக்காரனாவேன்,'' என்று எண்ணுகிறார்கள். இவ்வாறு எதிர்பார்த்த பலன் கிடைக்காவிட்டால் பயிற்சியை நிறுத்திவிடுகிறார்கள். அமைதி, போதுமென்ற மனம், மகிழ்ச்சி ஆகியவற்றோடு, உன் உள்ளமாகிய மலர் வனத்தில் தெய்வீகப் பண்புகள் மலர்ந்தால், ஆன்மீகப்பாதையில் உனக்கு முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது என்று உணர்ந்துகொள். மனதை ஒருமுகப்படுத்தும் பயிற்சியின் தொடக்கத்தில் சிகப்பு, நீலம் ஆகிய நிறங்களும், சூரியன், சந்திரன் போன்ற ஒளிகளும் உனக்கு முன் தோன்றும். இவைகளெல்லாம் தன்மாத்திரையின் விளைவுகள். உடலிலுள்ள பஞ்சபூதங்களின் காரணமாக ஐந்து வகையான நிறங்கள் தியானம் செய்யும் போது தோன்றுகின்றன. இவைகள் தோன்றுவதால் உன் இலட்சியத்தை அடைந்து விட்டதாக எண்ணிக் கொள்ளதே. அது ஆத்மஜோதி அல்ல. ஆத்மஜோதி சுயம் பிரகாசமானது. ஆத்மாதான் சாட்சி அல்லது காண்பவர். வேறு எப்பொழுதும் இல்லாமல், பார்ப்பவர் அல்லது சாட்சி மாத்திரம் இருந்தால், நீ ஆத்மாவை உணர்ந்து விட்டாய். சாட்சியாகிய ஆத்மாதான் ஒளிகளுக்கெல்லாம் ஒளி, பேரொளி, சுயம் பிரகாசமான ஒளி, தானே நிலைத்திருக்கும் ஒளி, சச்சிதானந்தப் பொருள், பரம் பொருள் ஆகியவை

யாகும். அந்த ஆத்மாவை, எல்லையற்ற பரம் பொருளை, அழியாத பொருளை, அளவு கடந்த ஆனந்தத்தை உணர்ந்து தெளிந்து கொள். அதன் பின்னர்தான் உனக்கு விடுதலை—இந்த உடலின் பந்தங்களினின்றும் விடுதலை—மனத்தின் தளைகளி லிருந்து விடுதலை—பிறப்பு, இறப்பு என்று ஓயாது சுழலும் சக்கரத்தினின்றும் விடுதலை பெறுவாய்.

தியானத்தின் மூலம் இந்த ஆன்மாவைப் பெற வேண்டியது உன் தலையாய கடமையாகும். மாயை, ராகத்வேஷங்கள் ஆகியவற்றின் காரண மாகஉனக்குள் இருக்கும் ஆன்மாவைப்பற்றி மறந்து விட்டாய். உன்னை அறியாமை ஆட்கொண்டுள்ள தால் பிறப்பு இறப்பாகிய சுழலில் மீள முடியாதபடி சிக்கிக் கொண்டு விட்டாய். உள்ளுறையும் ஆன்மா வையே இடைவிடாது தியானித்துக்கொண்டு இருப் பவர்கள், பிறப்பு இறப்பு என்னும் சுழலிலிருந்து விடுதலை பெற்று, அமர நிலையும், அழியாத பேரின்பமும் பெறுவார்கள். இந்த உலகிலுள்ள எந்தப் பொருளும் உனக்கு அமர நிலையும், எல்லை யற்ற பேரின்ப நிலையும் கொடுக்காது.

## குறிக்கோள் உயர்ந்ததாக இருக்கட்டும்.

நசிகேதஸ் மாதிரி மக்கள் நமக்கு இருக்க வேண்டும் உங்களுள் ஒவ்வொருவரும் நசிகேதஸின் இயல்பை உடையவர்களாக இருக்கவேண்டும். அது உங்களுக்கு அதிக வலிமையைக் கொடுத்து உங்களை தீரர்களாக்கும். அழிக்க முடியாத செல்வத்தை அது உங்களுக்கு அளிக்கும். அந்த நசிகேதஸ் என்பவன் பத்து வயதுள்ள ஒரு சிறுவன். ஆனால் அவன் அறிவு நிரம்பி, பகுத்தறியும் தன்மையுடையவனாக இருந்தான். அதனால் அவனைப் பரிசோதிப்பதற்காக எமதர்மன் எந்தவிதமான

இன்பத்தையும் கொடுப்பதாக ஆசை காட்டியும் அவனைத் தன்வயப்படுத்த முடியவில்லை. அதற்கு பதிலாக, ''பிரபுவே! அறிவுக்கும், தர்மத்துக்கும், அதர்மத்துக்கும் அப்பாற்பட்ட மேலான ஞானத்தை எனக்கு அருள வேண்டும். ஆன்மாவின் அமரத் தன்மையைப்பற்றி நான் அறிய விரும்புகிறேன். மரணத்துக்குப்பின் ஆன்மா என்பதே கிடையாது என்று சிலர் சொல்கிறார்கள். ஆனால் அமரத்தன்மையுள்ள, பேரின்பம் நிறைந்த, முழுமையும், விடுதலையும் பெற்ற ஆன்மா என்று ஒன்று இருக்கின்றது என்று வேறு சிலர் சொல்கிறார்கள்'', என்று நசிகேதஸ் எமதர்மனைக் கேட்டான். நசிகேதஸை போன்ற மக்கள்தான் நமக்கு வேண்டும். இந்த நசிகேதஸ் உணர்வுதான் உனக்கிருக்க வேண்டும். அப்போதுதான் நீ உண்மையில் செல்வம் படைத்தவனாவாய். இப்போது இவ்வுலகிலுள்ள அற்பமான இன்பதுன்பங்களில் நீ உழன்று கொண்டிருக்கிறாய். உன்னுடைய உண்மையான தெய்வீகத் தன்மையை மறந்துவிட்டாய். இந்த நசிகேதஸுக்கு எமதர்மன் பல விதங்களில் ஆசைகாட்டினான். ''நசிகேதஸ் உண்மையான வேதாந்தம் கற்கத் தகுதியானவன் தானா? அமரத்தன்மையுள்ள ஆன்மாவைப்பற்றி அறிந்து கொள்வதற்குரிய தகுதி படைத்தவன்தானா?'' என்று எமதர்மன் அறிய விரும்பினான். எனவே தான் பலவிதங்களில் ஆசை காட்டி சோதனை செய்தான். எமதர்மன் நசிகேதஸுக்கு அழகான பெண்களையும், தேவலோகத்து ரதங்களையும், ஏராளமான செல்வத்தையும் கொடுப்பதாகச் சொன்னான். ''பிரபுவே! இந்த உலகியல் பொருள்கள் எல்லாம் என் புலன்களை அழித்துவிடும். எனக்குக் 'கோடிக்கணக்கான வாழ் நாட்களைக் கொடுப்பதாக இருந்தால் கூட எல்லையற்ற காலத்தோடு ஒப்பிடும் போது அவை எம்மாத்திரம்? அந்தப் பெண்களையும், நீண்ட ஆயுளையும்,

ரதங்களையும் நீங்களே வைத்துக்கொள்ளுங்கள். ஞானங்களுக்கெல்லாம் உயர்ந்த ஞானமாகிய பிரம்ம வித்தையைக் கற்பித்து என்னை அமரத் தன்மையுடையவனுக்குங்கள். அதனால் நான் பிறப் பிறப்பாகிய சுழலிலிருந்து தப்பித்துக்கொள்வேன்'' என்று நசிகேதஸ் எமதர்மனை வேண்டினான்.

அதன் பிறகு எமதர்மன் நசிகேதஸுக்கு ஸ்ரேயஸ் மார்க்கத்தையும், பிரேயஸ் மார்க்கத்தையும் உபதே சித்தான். ஸ்ரேயஸ் மார்க்கம் உன்னை அமர நிலைக்கு அழைத்துச் செல்லும். ஆனால் பிரேயஸ் மார்க்கமோ — அற்பமான அதிகாரம், அற்பமான பொருள், சமூகத்தில் அற்பமான பதவி — உன்னுடைய இயல்பான தெய்வீகத் தன்மையையே மறக்கச் செய்துவிடும். நீங்கள் உங்களுடைய உண்மையான, சிறப்பான தெய்வீகத் தன்மையை மாயையின் ஆற்றல் காரணமாக மறந்து விட்டீர்கள். ஆனால் உண்மை, பொய் ஆகியவற்றைப் பிரித்தறியும் ஆற்றல் படைத்திருந்த நசிகேதஸோ அதற்கு அப்பாற்பட்டு நின்றான். இவைகள் அழியக்கூடியவை என்று அவனுக்குத் தெரியும். மரணம் ஒரு நாள் வரும். மூப்புவரும், உன் மனைவியையும் மக்களையும் நம்பியிருக்க முடியாது. ஒரு குழந்தைக்கு உடல் நிலை சரியில்லை, மற்றொரு குழந்தை டைபாய்ட் நோயால் வருந்துகிறது. புகழ் பெற்ற மருத்துவரின் குழந்தையையே வாத நோய் தாக்குகிறது. இந்த உடலைப் பலவிதமான நோய்கள் வருத்துகின்றன. உண்மையில் அகக்கண் அல்லது ஞானக்கண்ணைத் திறந்து விட்ட மனிதனுக்கு இந்த உலகியல் வாழ்க்கையில் துளிகூட இன்பமென்பதே இல்லை. இடைவிடாத தியானம், பிராணயாமம், பற்றற்ற தன்மை, சாதனை ஆகியவற்றின் மூலம் அவன் தனக்குள்ளேயே இன்பத்தைக் காண முயலுவான்.

## சகிப்புத்தன்மையுடனிரு

உலகத்தை வெறுத்துவிட்டு இமயமலைச் சாரலுக்கே போய்விட வேண்டும் என்பது பொருள் அல்ல. உன் தினசரி கடமைகளோடு, ஒழுங்கான, கட்டுப்பாடுள்ள வாழ்க்கையை நடத்த வேண்டும் என்பதே பொருளாகும். நீ இறைவனைப்பற்றி எப்பொழுதும் நினைத்துக்கொண்டே இருக்க வேண்டும். ஏதாவதொரு மந்திரத்தை உச்சரித்துக் கொண்டே இருக்க வேண்டும். இயேசுகிறிஸ்து, ஜெஹோவா, புத்தர், அல்லா ஆகிய மந்திரங்களெல்லாம் ஒரே இறைவனைத்தான் குறிக்கும். அற்ப விஷயங்களைப்பற்றி அற்பமான புத்தியையுடைய மக்களே சச்சரவிட ஆரம்பிப்பார்கள். மதத்தின் உண்மையான இயல்புகளை அறிந்து, அவற்றைப் பயிலாமல், ''புத்தர் இதைப்பற்றிச் சொல்லவில்லை; அதைப்பற்றிச் சொல்லவில்லை'' என்பது போன்று வீண் பேச்சுக்களைப் பேசுவார்கள். புத்தர் கடவுள். மறுப்புக் கொள்கையை ஒப்புக் கொள்ளவில்லை. நிர்வாணம் என்பது அகந்தையை அழித்துவிடுவதாகும். புத்தர் கடவுளைப்பற்றிப் பேசவில்லை. சிறிதளவுகூடத் தூய்மை இல்லாத மக்களிடம் மிகவுயர்ந்த தெய்வீகக் கருத்துக்களைப் பற்றி அவர் பேசவில்லை. ''உங்கள் உள்ளத்தைத் தூய்மைப் படுத்திக்கொள்ளுங்கள். பொறாமையையும் வெறுப்பையும் நீக்கிவிடுங்கள். இந்தத் தீய குணங்கள் எல்லாம் நீங்கிய பிறகு தூய்மையான மனம் தானே இறைவனை நோக்கித் திரும்பும். அதன் பிறகு நீ இறைவனை அறிவாய். பரம்பொருளின் இரகசியங்களைத் துருவி ஆராய முற்படாதே. முதலில் உன் உள்ளத்தைத் தூய்மைப்படுத்திக்கொள்'' என்று புத்த பகவான் சொல்கிறார். ''நிர்வாணம்'' என்ற சொல் ''சூன்யம்'' அல்லது ''ஒன்றுமற்ற தன்மையைக்'' குறிக்கவில்லை. தாழ்ந்த நிலையிலுள்ள

உன்னேயே நீ அழித்துக்கொள்வதுதான் நிர்வாணம். அதன் பிறகு அளவுகடந்த, எல்லேயற்ற கரையை யுடைய சத்தான சச்சிதானந்தப் பொருளே நீ அடைவாய்.

தெளிவற்ற அறிவு படைத்தவர்களும், மதத்தைச் சரிவர அனுஷ்டிக்காதவர்களும், வேதாந்த நூல்களே மனப்பாடம் மட்டும் செய்துள்ளவர்களும், ''பஞ்ச தசியையும் பிரம்ம சூத்திரங்களேயும் முழுதும் படித்துவிட்டோம். தூய அறிவே பிரம்மம். நான் தான் பிரம்மம்'' என்று சொல்வார்கள். அவர்கள் நமக்கு கற்பிக்கிருர்கள். சண்டையும் போடுகிருர்கள். இந்த பூதவுடலேப்பற்றிய அபிமானமும் மாயையுமாகிய கோசங்களே அவர்களால் ஒழிக்க முடியவில்லே. முழுமுதற்பொருளே அவர்களால் உணரமுடியவில்லே. அது மிகவும் நுண்ணியது. அது அணுவுக்குள் அணுவாகவும் அண்டத்துக்கு மேல் அண்டமாகவும் உள்ளது. அந்த ஆத்மா எனப் படுவது நுண்ணியவற்றுள் எல்லாம் நுண்ணியது. அவர்கள் மற்ருெரு முறையையும் கையாளுகிருர்கள். அவர்கள் கூட்டாகச் சேர்ந்து கொண்டு வியாபாரக் கூட்டுறவு சங்கங்களேயும், சினிமா கம்பெனிகளேயும் தொடங்குகிருர்கள். இதை நம் அறிவால் உணர முடிவதில்லே ''திருஸ்யதே அக்ரய புத்யா சூஷ்மாய சூக்ஷ்மதர்ஸிபி'' தீய பண்புகள் அனேத்தும் நீங்கி, தெய்வீக சம்பத்துகளாகிய மன அமைதி, ஒழுங்கு, பேதமின்மை, அக்கரை, எளிமை, வாய்மை, சமநிலே, உறுதி, எரிச்சலடையாத தன்மை, தர்மம், பெருநோக்கு, தூய்மை ஆகிய நற்பண்புகள் நிறைந்த தூய பகுத்தறியும் தன்மையால்தான் அதை உணரமுடியும். உன் மனம் இப்பண்புகளால் நிறையப்பெற்ருல் நீ வேறு மனிதனுகவே மாறி விடுவாய். சூரியன், சந்திரன், தீ, நீர், காற்று, ஆகாயம் ஆகியவற்ருேடும்

அவற்றுக்கப்பால் உள்ளவற்ருேடும் ஒன்றுபட்டு ஐக்கியமாகி விடுவாய்.

## உள்ளத்தைத் தூய்மைப்படுத்து

உள்ளத்தை முதலில் தூய்மைப்படுத்த வேண்டும். நசிகேதஸ் உணர்வோடு மைத்ரேயி உணர்வும் நமக்குத் தேவை. யாக்ஞவல்கியரின் மனைவியாகிய மைத்ரேயி பிரம்ம ஞானத்தைத் தவிர வேருென்றையும் விரும்பவில்லை. யாக்ஞவல்கியர் ஒரு மிகப் பெரிய முனிவர். பிருஹதாரண்ய உபநிடதத்தில் அவரைப்பற்றிச் சொல்லப்பட்டுள்ளதைக் காணலாம். அவர் ஜனக மஹாராஜாவின் அரசவைக்குச் சென்று ஏராளமான செல்வத்தை பெற்ருர். அங்கிருந்த பண்டிதர்கள் அனைவரோடும் வாதிட்டு வென்று அவர்களுடைய ஐயங்களைப் போக்கினுர். ஏராளமான பசுக்களையும் பொன்னையும் பரிசாகப் பெற்ருர். அவர் காட்டுக்குச் சென்று துறவறம் பூண விரும்பினுர்.

பிரம்மச்சரியம், கிரஹஸ்தம், வானப்பிரஸ்தம், சன்னியாசம் ஆகியவை குறிப்பிட்ட பண்புகளை வளர்த்துக் கொள்வதற்காக ஏற்படுத்தப்பட்டன. பிரம்மச்சரிய நிலையில் தூய்மையைப் பெருக்கிக் கொள்ளலாம். இல்லறத்தில் அநேக தர்மங்களைச் செய்வாய். பெருந்தன்மை, சகிப்புத்தன்மை, இரக்கம் ஆகிய பல பண்புகள் வளரும். குகையில் வாழும் ஒரு மனிதன் சகிப்புத் தன்மையையோ இரக்கத்தையோ வளர்த்துக் கொள்ள முடியாது. கோபம் அல்லது பொருமைக் குணத்தை அவன் வென்று விட்டாஞ, இல்லையா என்று சோதித்துப் பார்க்க முடியாது. காமம், கோபம், பேராசை ஆகியவற்றை அவன் வென்று விட்டான் என்பதை எப்படி நாம் உணர முடியும்? இவ்வுலகத்தவரோடு

வாழும் போதுதான் உன்னை அடிக்கடி பரிசோதித்துக் கொள்ளமுடியும். உலகம்தான் சிறந்த குரு அல்லது ஆசிரியர் ஆகும். தத்தாத்ரேயருக்கு இருபத்து நான்கு குருக்கள் இருந்தார்கள். நீ எத்தனை பேரை வேண்டுமானாலும் குருவாக அடையலாம். உலகிலுள்ள ஒவ்வொரு பொருளும் உனக்கு ஒரு பாடத்தைக் கற்பிக்கும். பூமி உனக்குப் பொறுமையைக் கற்பிக்கிறது. இம்மாதிரியே உலகிலுள்ள ஒவ்வொரு பொருளிடமிருந்தும் நீ ஒவ்வொரு பாடத்தைக் கற்றுக் கொள்ளலாம்.

## விரைவில் ஓய்வு பெறு

உனக்கு வாழ்க்கையில் குறிப்பிட்ட திட்டமிட்ட அட்டவணை இருக்கவேண்டும். ஆனால் உனக்கு எவ்விதத் திட்டமுமில்லை. அதனால்தான் ஆன்மீக முன்னேற்றமில்லை. அநேக மக்கள் குறிக்கோள் இல்லாத வாழ்க்கையை நடத்துகின்றனர். நாம் என்ன செய்கிறோம் என்று நமக்கே தெரியவில்லை. பணம், காசு, செல்வம் என்று தேடுவதிலேயே தங்கள் வாழ்க்கை முழுவதையும் செலவிடுகின்றனர். அவர்கள் வாழ்க்கையில் ஒருவித திட்டமுமில்லை. அதுதான் அவர்களுடைய குறிக்கோள். ''உங்களில் எவ்வளவுபேர் வாழ்க்கையை திட்டமிட்டு நடத்துகிறீர்கள்?'' என்று நான் கேட்டால் மிகச் சிலரே, ''ஆம், எனக்கு வாழ்க்கைத் திட்டம் ஒன்றுண்டு'' என சொல்வீர்கள்.

உங்கள் மக்கள் தத்தம் வாழ்க்கையை நிலையாக அமைத்துக்கொண்டவுடன், உங்கள் பெண்களுக்குரிய வாழ்க்கையை அமைத்துக்கொடுத்தவுடன், எஞ்சியுள்ள உங்கள் வாழ்க்கை முழுவதையும் உங்களுக்குள்ளே தூய்மைப்படுத்திக்கொள்வதிலும், எதிர்த்து வெல்லமுடியாத உள்ளத்தை உறுதிப்

படுத்துவதிலும் தத்துவத்தின் ஆறு அங்கங்களையும் உபநிஷத நூல்களை கற்றறிவதிலும் செலவிட வேண்டும். இவ்வாறு உங்களைத் தயார் செய்து கொண்ட பிறகு, தெய்வீக ஞானத்தையும், பக்தி நெறியையும் தன்னலமற்ற தொண்டு மனப்பான்மை யையும் பரப்பும் போதகர்கள் அல்லது பிரசாரகர் களாக மாறுங்கள். வாழ்க்கையில் மீதியுள்ள பாகத்தைத் தியானத்திலும், தூய்மையிலும் தன்னலமற்ற சேவையிலும், ஆன்மீக ஞானத்தைப் பரப்புவதிலும் செலவிட வேண்டும்.

ஆனால் ஒரு சிலர் ஓய்வு பெற்ற பிறகுகூட சுதேச மன்னர்களின் அரசாங்கங்களில் திவான் களாகப் பணியாற்றச் செல்கிறார்கள். சுதேச இராச்சியங்கள் இப்போது மத்திய அரசோடு இணைக்கப்பட்டு விட்டபடியால் அவர்கள் புது வழியைக் கையாளுகிறார்கள். அவர்களில் பலர் கூட்டாகச் சேர்ந்துகொண்டு வரையறுக்கப்பட்ட நிறுவனங்களாகவும், கூட்டுறவுச் சங்கங்களாகவும் ஏற்படுத்திக்கொண்டு பணம் தேடும் வழியைக் காண்கிறார்கள். இந்நாட்களில் அதிகமான வசூலைத் தரும் சினிமா கம்பெனிகளை ஏற்படுத்திக் கொள் கிறார்கள். உன் வாழ்வின் அந்திப்பொழுதை தியானத்திலும் ஆழ்ந்த சிந்தனையிலும் செலவிட வேண்டும் என்பதை நினைவில் வைத்துக்கொள். அதுதான் சரியான ஞானம். எந்தவிதமான சிந்தனையிலும் இதுவரை நீ ஈடுபடவில்லை. எண்ணிப் பார்! இந்த உலகியல் வாழ்க்கையில் உன் அனு பவங்கள் என்ன? உண்மையான இன்பம் எங்கே இருக்கின்றது? செல்வத்தாலும் உலகியல் சொத்துக்களாலும் எந்த அளவுக்கு இன்பம் பெற்றி ருக்கிறாய்? இந்த மனம் என்பது என்ன? மூவகை யான குணங்கள் எவை? எந்த குணம் குறிப்பிட்ட

நேரத்தில் மேலோங்கி நிற்கின்றது? தாமஸ குணத்தை ராஜஸ குணமாகவும், ராஜஸ குணத்தை சத்துவ குணமாகவும் எவ்வாறு மாற்றுவது? வாழ்க்கையின் ஒரு பகுதியை சமூகத் தொண்டில் செலவிட்ட பிறகு வாழ்க்கையின் முழு நேரத்தை யும் ஆழ்ந்த சிந்தனையில் செலவிட வேண்டும். பகுத்தறிவுள்ள மனிதன் தன் மக்களிடம் பாசம் வைத்திருப்பதைப்போல் பறவைகள்கூடத் தம் குஞ்சுகளிடம் பாசம் செலுத்துவதில்லை. குஞ்சு களுக்குச் சிறகு முளைத்தவுடன், தாய்ப்பறவை அவைகளையே வெளியில் பறந்து சென்று இரை தேடிக் கொள்ளும்படி அனுமதித்து விடுகிறது. ஆனால் மனிதனே திட்டமிட்ட வாழ்க்கையை நடத்தாமல் தன் மக்களிடமும், பேரக் குழந்தை களிடமும் இறுதிவரை பாசம் வைத்துக் கொண்டு மகிழ்ச்சியற்ற வாழ்க்கையை நடத்து கிறான்.

மனத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். தியானத் தில் ஒழுங்கு தவறாமல் இரு. மனதைக் கவனத் துடன் ஆராய்ந்து அதிலுள்ள குறைகளைப் போக்கிக் கொள்ள வேண்டும். யாராவது உன் னிடமுள்ள குறைகளை எடுத்துச் சொல்லும்போது அவர்களுக்கு நன்றி சொல்லுவதற்குப் பதிலாக அவரிடம் வருத்தப்படுகிறாய். அவர் உனக்கு உண்மையில் உதவி செய்திருக்கிறார். மனதின் உள்ளே மறைந்துள்ள குறைகளைச் சுட்டிக் காட்டு கிறார். உண்மையிலேயே உன்னிடமுள்ள குறைகளை ஒருவர் எடுத்துக் காட்டினால் வருந்துகிறாய். மாறாக மற்றவர்களிடம் இல்லாத குறைகளை கற்பனை செய்து கொண்டு அவர்கள் மீது சுமத்தப் பார்க்கி றோம். உண்மையில் அவரிடம் எவ்விதமான குறையும் இருக்காது, இந்த அற்பத்தனமான

மனதின் இயல்பு அதுதான். நமக்குள்ளே தெய்வீக இயல்புகள் நிறைய இருக்கின்றன. இந்த அற்பமான மனதுதான் தீய இயல்புகளைத் தோற்றுவிக்கின்றது.

நாம் புனிதமான மத நூல்களைப் படிக்க வேண்டும். மனதைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். மனதை ஒருமுகப்படுத்த வேண்டும். ஒவ்வொருவருக்கும் வாழ்க்கையில் திட்டமிட்ட அமைப்பு வேண்டும். 45 அல்லது 50 வயதுவரை இல்லறத்திலும் அதன் பின் வானபிரஸ்த வாழ்க்கையும் இருக்க வேண்டும். 75 வயதுக்குப் பிறகாவது சிறிதளவு ஜெபத்திலும், தியானத்திலும் ஈடுபட வேண்டும். பகவத்கீதை, பைபிள், குரான், மதங்கள் அனைவற்றிலுமுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை ஆராயும் நூல்கள், தத்துவ சாஸ்திரம் ஆகியவற்றைப் படிக்க வேண்டும். ''நீ உண்மையில் தெய்வீகமானவன்; இந்தக் கீழான மனம் நீ அல்ல'' என்ற உண்மையை எடுத்துக் கூறும் மகாவாக்கியங்கள் ஒவ்வொரு மதத்திலும் இருக்கின்றன. இந்த அற்பமான மனம் பெருங் கேட்டை விளைவிக்கின்றது. கீழ்த்தரமான மனம் அழிக்கப்பட்டு, மனதின் சத்துவகுணம் பெருகுமானல் உன்னுடைய ஐயங்களெல்லாம் நீங்கி விடும். சத்துவ குணம் மிக உயர்ந்தது. சத்துவ குணம்தான் உன்னுடைய குரு. தவருமல் ஒழுங்காக தியானம் செய்வாயானல், உன் ஐயங்களெல்லாம் நீங்கிவிடும். கர்மங்களெல்லாம் எரிக்கப்படும். அதன் விளைவாக உனக்குள்ளே இருக்கும் ஆத்மாவைக் காணலாம். ''பித்யதே ஹ்ருதய கிரந்தி சித்யந்தே ஸர்வ ஸம்ஸய: க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி, தஸ்மின் திருஷ்டே பார்வரே''

## மூவகையான கிரந்திகள்

மூவகைக் கிரந்திகள் எவை ? அவையாவன அவித்தை, காமம், கர்மம் எனப்படும். அவித்தை தான் அடிப்படையான அறியாமை. இந்த அறியாமையின் விளைவாக காமமாகிய ஆசை தோன்றியது. தூய்மையான முழுமுதற்பொருளில் ஆசை என்பதே கிடையாது. ஆசை என்பது முழுமையற்றது. ஆசையின் விளைவாக கர்மம் என்னும் செயல் தோன்றியது, வெளியில் காணப்படும் பொருள்களிடமிருந்து இன்பம் பெற விரும்புகிறாய். முழுமையற்றநிலை இல்லாத பொழுது, ஆசையில்லாத பொழுது, ஆன்மாவின் பேரின்பத்தை அடைவாய், இந்த ஆசைகளையும் வேட்கைகளையும் ஒழுங்கான தியானத்தின்மூலம் அழித்து விடுவாயானால் இந்த கிரந்திகளிடமிருந்து விடுதலை பெறலாம்.

கால்கள் எளிமையையும், அடக்கத்தையும் விரும்புவதில்லை. சில நிமிட நேரமாவது பத்மாசனத்தில் அமர்ந்து தியானம் செய்யவோ, பிராணயாமம் பயிலவோ உன்னால் முடியவில்லை. நாம் ஆடம்பரத்தையே விரும்புகிறோம். ஏனெனில் இந்த உடலைத் தக்க முறையில் வளர்க்கவில்லை. நாள்தோறும் சில ஆசனங்களையாவது செய்ய வேண்டும். பத்மாசனமும் சித்தாசனமும் தியானத்துக்கு ஏற்றவை. முதுகெலும்பை இளகிய நிலையில் வைத்திருக்கவும். தைராய்டு சுரப்பி தன் வேலையைச் சரியாக செய்யத் தூண்ட சர்வாங்காசனம் பயன்படுகிறது. நல்ல நிலையில் இருக்கும் தைராய்டு சுரப்பி உடல் உறுப்புக்கள் அனைத்தும் நல்ல முறையில் செயலாற்ற உதவும். தினசரி ஆசனம் செய்வதினால் மிகச் சிறந்த உடல் நிலையும், மகிழ்ச்சியும், உற்சாகமும், ஆண்மையும் உனக்கு உண்டாகும். ''எனக்கு வயதாகிவிட்டது, என்னால் இனி ஆசனங்கள் செய்ய முடியாது'' என்று சிலர்

நினைக்கிறார்கள். அது தவறு. எல்லோரும் ஆசனங்கள் செய்யலாம். எண்பதாவது வயதில் கூட ஆசனம் பயிலத் தொடங்கலாம். ஒரு சிறுவனைப்போல் எல்லா ஆசனங்களையும் உன்னால் செய்ய முடியாவிட்டாலும், உடல் நலமும், இளகிய தண்டுவடமும், வளைந்து கொடுக்கக்கூடிய உடலும் பெறுவதற்காக நீ செய்யக்கூடிய சில ஆசனங்களும் இருக்கின்றன. படுக்கையிலிருந்து கொண்டே சில ஆசனங்களைச் செய்யலாம். சிரசாசனம் சரிவர செய்ய முடியாவிட்டாலும் முயலைப் போன்று சாய்ந்து நின்று செய்யக்கூடிய ஆசனம் உள்ளது. இதைச் செய்வதால்கூட மூளையின் பல்வேறு மையங்களுக்கு இரத்த ஓட்டம் போதுமான அளவுக்குக் கிடைக்கும். நினைவாற்றலும், மூளையின் ஆற்றலும் அதிகரிக்கும். மனத்தால் செய்யக்கூடிய வேலைகளை அதிக அளவு செய்ய முடியும். சர்வாங்காசனத்தின் மூலம் தண்டு வடத்தின் பல்வேறு மையங்களுக்கு இரத்த ஓட்டம் சரிவர சென்று தண்டுவடம் இளகிய தாக இருக்கும். ஆசனங்களைச் செய்யாவிட்டால், உன் எலும்புகள் சிறிது சிறிதாக ஆற்றலை இழந்து விடும். உனக்கு வயது அதிகமாகிவிட்டதென்று நினைக்கிறாய். இந்தப்பக்கமும், அந்தப்பக்கமும் சிறிதளவு வளைந்து அசைவதால்கூட (நீ படுக்கை யிலிருந்துகொண்டே செய்யலாம்) எப்பொழுதும் இளமையுடனும், வலிமையுடனுமிருக்கலாம். உனக்கு வயதாகிவிட்டதென்று எண்ணாதே. நீ இருநூறு ஆண்டுகள் கூட வாழலாம். இப்பொழுது முதல் புது வாழ்க்கையைத் தொடங்கு. ஏனென்றால் இப்பொழுதுதான் உனக்கு வாழ்க் கையின் இலட்சியத்தைப்பற்றிப் புரிந்திருக்கிறது. ஒழுங்காக ஆசனங்களைப் பயில்வதால் சமுதாயத் துக்கு தன்னலமற்ற சேவையை ஆற்றலாம். இது மிகவும் இன்றியமையாதது.

## தன்னலமற்ற தொண்டு செய்

தன்னலமற்ற சேவையை எவரும் செய்வதில்லை. அப்படி எவராவது ஏதாவது அறம் செய்தாலும் அதில் அடிப்படை நோக்கம் ஒன்றுள்ளது. உன்னிடம் இரண்டு கோடி ரூபாய் இருந்து நீ அதில் ஐம்பதாயிரம் ரூபாய் தருமம் செய்தாலும், பத்து ரூபாய் வைத்துள்ள ஒருவன் பத்து ரூபாய் தருமம் செய்துவிட்டு இரண்டு நாட்கள் பட்டினிகிடக்கும் ஏழையின் செயலோடு ஒப்பிடும்போது உன்னுடையது ஒன்றுமில்லை. அந்த ஏழை செய்யும் தருமத்தைக்கண்டு இறைவன் மகிழ்ச்சி கொள்வான்.

நாம் எல்லோரும் மரணமில்லா அமர நிலையை விரும்புகிறோம். ஆனால் தன்னலம் கருதாமல் சேவை செய்ய எவரும் விரும்புவதில்லை. ஆனால் சுவாமி சிதானந்தாஜி அவ்வாறு சேவை செய்துள்ளார். உடல் முழுதும் உண்ணிகள் நிறைந்து புண்களால் அவஸ்தை பட்டிருந்த நாய் ஒன்று ஆசிரமத்திலிருந்தது. அவர் நாள் தோறும் அந்த நாய்க்கு மருந்து தடவி கட்டுகள் கட்டினார். நீயோ அந்த நாயின் அருகிலேயே போகமாட்டாய். அவர் அந்த நாயினிடம் இறைவனைக் கண்டார். அந்த மாதிரி சேவையைத்தான் நீ செய்ய வேண்டும்.

ஒவ்வொருவரையும் நீ இறைவனாகக் கருத வேண்டும். ஓர் ஏழையைத் தெருவில் காணும்போது அவன் என்னுடைய ஆன்மாதான். அவன் என் இறைவன். அவனுக்குத் தொண்டு செய்ய ஒரு வாய்ப்பு அளித்து என்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ள எனக்கு ஒரு சந்தர்ப்பம் அளிக்கவே அவன் இங்கு வந்துள்ளான் என்று நீ எண்ணவேண்டும். அப்போது உனக்கு அளவு கடந்த மகிழ்ச்சி ஏற்படும்.

ஆசிரமத்துக்கு அருகே சாலையோரத்தில் ஒரு தொழுநோயாளிபடுத்துக்கிடந்தான். சிதானந்தாஜி மூன்று மாதகாலம் தம் கையாலேயே அவனுக்குக் கட்டுகள் கட்டினார். அந்தத் தொழுநோயாளி வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான். நீயோ அவன் அருகிலே போகமாட்டாய். இந்த மாதிரி அளவற்ற சேவைகளை இறைவனுக்கு நீ அர்ப்பணிக்கலாம். நீ செய்வது ஒரு சில ஆனாலும், அம்மாதிரி சேவை இறைவனுக்கு மகிழ்ச்சியைக் கொடுத்து, உன் உள்ளத்தை தூய்மைப் படுத்தும். தன்னலமற்ற சேவை மிகவும் தேவையான ஒன்றாகும். அதற்கு அதிக பணமே தேவையில்லை. உண்மையான ஆர்வ மிருந்தால், உன் உடலாலேயே சேவை செய்யலாம். உண்மையான கொழுந்து விட்டெரியும் ஆர்வக் கனல், பக்தி, விடுதலை' அடைய வேண்டும், என்ற ஆசை ஆகியவையே தேவை. விருப்பு வெறுப்பற்ற நிலை தீவிரமாக இருக்கவேண்டும். இவைகள் எல்லாம் கட்டாயம் உன்னிடம் இருக்க் வேண்டும். உங்கள் எல்லோருக்கும் நன்றி. மற்றும் நான் உங்களுக்கே கடமைப்பட்டவனுமாகிறேன். ஏனென்றால் உங் களுக்குச் சேவை செய்வதற்கு எனக்கு ஒரு சந்தர்ப் பத்தை அளித்திருக்கிறீர்கள். என் பேச்சையும் அமைதியாகக் கேட்டீர்கள். மதிப்புக்குரிய தலைவர் அவர்களுக்கும் இக்கூட்டத்தினருக்கும், இலங்கை வாழ் மக்கள் அனைவருக்கும், தெய்வீக வாழ்க்கைச் சங்கத்தின் அமைப்பாளர்களுக்கும், வட இந்தியா விலுள்ள கங்கை நதியைப் போன்ற மாணிக்க கங்கை பாயும் பூமியில் வாழும் மக்களுக்கும், கதிர் காமத்திலுள்ள முருகக் கடவுள் வாழும் நாட்டுக்கும் என் அமைதியான பிரார்த்தனைகள். இராமபிரான், வீரனான அநுமான் ஆகியவர்களுடைய புனிதமான காலடிசுவடுகள் பட்ட புனித பூமிக்கு வந்ததற்காக நான் பெருமகிழ்ச்சி அடைகிறேன். உங்கள் அனை வருக்கும் இறைவன் உடல் நலமும் நீண்ட ஆயுளும்,

அமைதியும், வாழ்வில் வளமும், அழியாத இன்பமும், எடுத்தகாரியங்கள் அனைத்திலும் வெற்றியும், சிறப்பான தொழிலும், வித்தை, துஷ்டி, புஷ்டி, தெய்வீக சம்பத்துக்கள் ஆகியவற்றை இறைவன் வாரி வழங்கட்டும்.

நான் இப்போது சில ஆங்கிலப் பாடல்களைப் பாடுகிறேன்.

சிறிதளவே உண்ணு; சிறிதளவே குடி; சிறிதளவே பேசு; சிறிதளவே தூங்கு.

உன் உறக்கத்தைக் குறைத்து, அதனால் கிடைக்கும் நேரத்தை உயர்ந்த செயல்களான, படிப்பு தியானம், மக்களுக்குச் சேவை ஆகியவைகளுக்குப் பயன்படுத்த வேண்டும். அப்போதுதான் உன் இலட்சியத்தை அடைய முடியும்.

பிறரோடு சிறிதளவு பழகு; சிறிதளவே கலந்து உறவாடு; சிறிதளவு தொண்டு செய்; சிறிது ஓய்வு எடுத்துக்கொள்.

ராகத்துவேஷங்களின் விளையாட்டின் விளைவாக நீ மனக்கலக்கம் அடைகிறாய். அதனால் பிறரோடு சிறிதளவே பழகு. அதனால் உனக்கு எவ்விதமான பாதிப்பும் ஏற்படாது. யோகத்தில் வளர்ச்சி பெற்றபின் எல்லாரோடும் பழகலாம். சிறிதளவு கலந்து உறவாடு. இருபது அல்லது முப்பது மைல்கள் நடந்தபின் தியானத்தில். ஈடுபட முடியாது.

சிறிதளவு ஆசனங்களைச் செய்; சிறிதளவு பிராணாயாமம் செய்; சிறிதளவு விசாரம் (சிந்தனை) செய்; சிறிதளவு தியானம் செய்.

இப்பொழுது பதினெண் வகைப் பண்புகளைப் பற்றி ஒரு பாட்டு பாடுகிறேன்.

மனஅமைதி, ஒழுங்குதவறுமை, கர்வமின்மை,
அக்கரை, எளிமை, உண்மை.

மனம் கிளர்ச்சி அடைந்தபோது, அங்கு தெய்வீக ஒளி தோன்றுது. அமைதியான மனம் இருக்க வேண்டும். சாதனையில் ஒழுங்கு தவறுமை மிகவும் முக்கியம். ஒழுங்கு தவறிய சாதனையால் நீ எவ்விதமான பயனையும் அடைய முடியாது.

மனச்சமநிலை, உறுதி, அருவருப்பு அடையாமை, சரிக்கட்டிக்கொண்டு போதல், அடக்கம், விடாமுயற்சி.

இந்தப் பண்புகளைப் பயின்ருல், கடவுள் தாமே உன்னிடம் வருவார். காந்திஜியிடம் மிக முக்கிய மான பண்பாகிய தளராத விடாமுயற்சி இருந்தது. ''எது வந்தாலும் வரட்டும். நான் என் சாதனையை விடமாட்டேன்'' இந்த மாதிரி எண்ணமுள்ள மனிதன் வெற்றி பெறுவது உறுதி.

நாணயம், பெருந்தன்மை, கண்ணியம், தருமம், தாராள மனப்பான்மை, தூய்மை, பிரம்மம்தான் உண்மையான பொருள், மற்றவை எல்லாம் பொய்யான தோற்றமே.

நீ எப்பொழுதும் முடிவற்ற காலத்துக்கு அமரத் தன்மையோடு வாழ்வாய். வேற்றுமையில் ஒற்று மையைக் காண்பாய். பல்கலைக்கழகத்தில் இதை நீ அடைய முடியாது.

மீண்டும் அனைவருக்கும் நன்றி. இறைவன் அருளைப் பெறுவீர்களாக.

ஓம் த்ரயம்பகம் யஜாமஹே
ஸுகந்திம் புஷ்டிவர்த்தனம்
உர்வாருக மிவ பந்தநாத்
ம்ருத்யோர் முக்ஷீய மாம்ருதாத்

இவ்வுலகத்தில் வாழ்வில் குழப்பங்கள் நிறைந்த இக்காலத்தில் ஒவ்வொருவரும் இம்மந்திரத்தை மீண்டும் மீண்டும் உச்சரிக்க வேண்டும். இது சிவ பெருமானுக்குரிய பிரார்த்தனை. ''இறைவா! பிறப்பிறப்பாகிய சுழலிலிருந்து என்னை விடுவித்து எனக்கு அமர நிலையை அருள்வாயாக'' என்று ஒரு சாதகன் இறைவனை வேண்டும் மந்திரம் இது. காயத்ரி மந்திரத்தைப்போன்று இந்த மந்திரத்தின் முதல் பகுதி வணக்கமாகவும், பிற்பகுதி வேண்டுகோளாகவும் அமைந்துள்ளது. காயத்ரி மந்திரத்தில் நீ ஞானத்தைப் பெற வேண்டுகிறாய். எதற்கு? ''இதுவரை இந்த உடலோடும், மனதோடும் என்னைக் கட்டுப்படுத்திக் கொண்டிருந்தேன். இறைவனே எனக்கு ஞானத்தைக் கொடு. அதனால் என் பொய்யான எண்ணத்தை விட்டு விட்டு, என் உண்மையான இயல்பை அறிந்து கொள்கிறேன்.'' மோட்சத்தை அடைய விரும்புவது ஆசை அல்ல.

மஹா மிருத்யுஞ்ஜய மந்திரத்தை ஜெபிப்பவர்களுக்கு விபத்துக்களே நேராது. சைக்கிள், மோட்டார், ரயில், குதிரை வண்டி, ஆகாயவிமானம் முதலியவைகளில் அவர்களுக்கு விபத்து ஏற்படாது. அவர்களுக்கு எவ்விதமான நோயும் வராது. அவர்கள் நல்ல உடல் நலமும் நீண்ட ஆயுளும் பெறுவார்கள். இந்த மந்திரம் உங்களுக்கு மோட்சத்தையும்

அளிக்கவல்லது. எனவே தயவு செய்து இந்த மந்திரத்தை உச்சரியுங்கள்.

ஸர்வேஷாம் ஸ்வஸ்திர் பவது
ஸர்வேஷாம் சாந்திர் பவது:
ஸர்வேஷாம் பூர்ணம் பவது
ஸர்வேஷாம் மங்களம் பவது

ஸர்வே பவந்து ஸுகின:
ஸர்வே ஸந்து நிராமயா:
ஸர்வே பத்ராணி பச்யந்து
மா கச்சித் துக்கபாக்பவேத்

ஓம் சாந்தி ! சாந்தி ! சாந்தி !

அஸதோமா ஸத்கமய:
தமஸோ மா ஜ்யோதிர் கமய
ம்ருத்யோர் மா அம்ருதம் கமய

ஓம், பூர்ண மத; பூர்ணமிதம்
பூர்ணாத் பூரணமுதயச்யதே;
பூர்ணஸ்ய பூர்ணமாதாய
பூர்ணமே வாவசிஷ்யதே

ஓம் சாந்தி ! சாந்தி ! சாந்தி !



